# வேதாள உலகம்


ப. சம்பந்த முதலியார், பி.ஏ., பி.எல்.,
நாடகப் பேராசிரியர்
அவர்களால் இயற்றப்பட்டது.


இந்த நூலாசிரியரால் இயற்றப்பட்ட மற்ற நூல்கள்:—

லீலாவதி சுலோ... ...தரன், மகபதி, காதலர்கண்கள், நற்குல... ...பசியின் சாபம், இடைச்சுவர் இருபுறமும், ... ...ரங்கம், கள்வர் தலைவன், தாசிப்பெண், பெ... ...வால்குருகள், சிம்ஹளநாதன், விரும்பிய விதமே, சாரங்கதரா, காலவரிஷி, ரஜபுத்ர வீரன், உண்மையான சகோதரன், சதி-சுலோசனா, புஷ்பவல்லி, கீதமஞ்சரி, உத்தமபத்தினி, அமலாதித்யன், சபாபதி முதற்பாகம், பொங்கல் பண்டிகை அல்லது சபாபதி இரண்டாம் பாகம், ஓர் ஒத்திகை அல்லது சபாபதி மூன்றாம் பாகம், சபாபதி நான்காம் பாகம், பேயல்ல பெண்மணியே, புத்த அவதாரம், விச்சுவின் மனைவி, மனைவியால் மீண்டவன், சந்திரஹரி, சுபத்திரார்ஜுனா, கொடையாளி கர்ணன், சஹதேவன் சூழ்ச்சி, நோக்கத்தின் குறிப்பு, இரண்டு ஆத்மாக்கள், சர்ஜன் ஜெனரல் விதித்த மருந்து, மாளவிகாக்னிமித்ரம், விபரீதமான முடிவு, சுல்தான்பேட்டை சப்-அஸிஸ்டெண்ட் மாஜிஸ்டிரேட், சகுந்தலை, காளப்பன் கள்ளத்தனம், விக்ரமோர்வசி, முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும், நாடகமேடை நினைவுகள்—ஆறு பாகங்கள், நாடகத் தமிழ், யயாதி, பிராமணனும் சூத்திரனும், வாணீபுர வணிகன், இரண்டு நண்பர்கள், சத்ருஜித், ஹரிச்சந்திரன், மார்க்கண்டேயர், ரத்னாவளி, கண்டு பிடித்தல், கோனேரி அரசகுமாரன், சந்தையிற் கூட்டம், வைகுண்ட வைத்தியர், தீட்சிதர் கதைகள், ஹாஸ்யக்கதைகள், சுறமகள், நல்லதங்காள், சிறுகதைகள், நடிப்புக்கலையில் தேர்ச்சி பெறுவதெப்படி? ஹாஸ்ய வியாசங்கள், ... ...க்காக்ஷி, விடுதிப் புஷ்பங்கள், பேசும்பட அனுபவங்கள் ...கடம்பம், மாண்டவர் மீண்டது, ஆஸ்தானபுரம் நாடகசபை பயித்தியம், ஒன்பது குட்டி நாடகங்கள், சபாபதி ...வாலயங்கள்—இந்தியாவிலும் அப்பாலும்,—ஐந்து ...லய சிற்பங்கள், மனையாட்சி, தீபாவளிவரிசை, இந்தியனும் ஹிட்லரும், காலக் குறிப்புகள், சுப்ரமண்ய ஆலயங்கள், தீயின் சிறுதிவலை, கலையோ காதலோ, உணவுப் பொருள்களின் குணங்கள், சபாபதி துவிபாஷி—சபாபதி அனுக்குகள் முதலியன.




புதுப் பதிப்பு

சென்னை.

ரத்தின விலாஸ் அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

1950





[விலை ரூ. 1—8—

எனது தந்தை தாயார்

பம்மல் விஜயரங்க முதலியார்

பம்மல் மாணிக்கவேலு அம்மாள்

ஞாபகார்த்தம்

த. இந்தா. [ஒன்று கொடுக்கிறான்.]

ரா. ஏ ! இவ்வளவுதானா ? எனக்கு வேண்டாம் போ. —

த. வா இப்படி, கோவிச்சிக்காதே ! கணக்குபார். நான் லட்டு இருக்கிற இடம் சொன்னேன், அதுக்கு ஒண்ணாச்சா? உனக்கானா வயசுலே பெரியவன், அதுக்கு ரெண்டாச்சா ? உன் வவுத்துக்கானா என் வவுறு எவ்வளவு பெருசு, அதுக்குப் பத்தாச்சா ?—

ரா. இன்னும் ஐந்து இருக்கிறதே ?

த. இத்தனி நாழி நான் கையிலே வைசசிக்கினு இருந்தேனே, அதுக்கு ரெண்டாச்சா ?

ரா. உம் ! இததனை நாழியாகத் தின்றாயே ?

த. அதுக்கு ரெண்டு.—போக மீதி, உனக்கு ஒண்ணு.

ரா. உம்! அதெல்லாம் உதவாது—எனக்கு வேண்டாம்போ !

த. ராஜகுமாரா, வா இப்படி! உனக்காக வாத்தியார் கிட்ட எவ்வளவு அடி படரேன் நான் ? அதுக்காக வாணும் எனக்குப் பங்கு ?

ரா. ஆமாம், ஆமாம். பாவம்!—எடுத்துக்கொள் நீ எல்லாவற்றையும்.

த. பாத்தையா ! நியாயமில்லாதே நடப்பேனா நானு—

ரா. தத்தா! தத்தா! அதோ பார்! பழம்! பழம் வருகிறது!

த. எதோ ? எதோ ?

[ராஜசிம்ஹன் ஒருபுறம் தத்தனுடன் பேசுகிறான்.]

தாம்பாளத்தில் சில பழங்களுடன் ஒரு தோழி வருகிறாள்

ரா. [அவளுக் கெதிரிற்போய் நின்றுகொண்டு] உம்—

தோ. அரசே, வழி விடும் [அவளுக்குப் பின்புறம் தத்தன் ஒவ்வொரு பழமாகக் கவர்ந்து கொள்கிறான்.]

ரா. உம்—எங்கே போகிறாய் ?

தோ. மஹாராணியிடம்

ரா. உம்—அம்மா எங்கே இருக்கிறார்கள் ?

தோ. பூஜாக்கிருஹத்தில்.

ரா. உம்—என்ன செய்கிறார்கள் ?

தோ. பூஜை செய்கிறார்கள்.

ரா. உம்— என்ன பூஜை ?

தோ. கௌரி பூஜை ?

ரா. ஏன் தினம் அம்மா கௌரி பூஜை செய்கிறார்கள் ?

தோ. வழிவிடும், அரசே! எங்களுடன்தானா உமக்கு விளையாட்டு ?

ரா. ஏ! விளையாடக்கூடாதோ! தவறென்ன அதில் ?

தோ. ஒன்று மில்லை, வழிவிடும் நீர்.

ரா. சரிதான் போ.—

த. ஏ, ஏ!—இன்னம் கொஞ்சம் பேசு.

தோ. [திரும்பிப் பார்த்து] நீங்கள் என்ன ஐயா செய்கிறீர்கள் இங்கே ?

த. சும்மா இருக்கிறேன். [இச சமயம் ராஜசிம்ஹன் ஒரு பழத்தைக்கவர, தோழி அவனைப் பிடித்துக் கொள்கிறாள்.]

தோ. [தாம்பாளத்தைப் பார்த்து] ஆ! எல்லாப்பழமும்போய்விட்டது! அரசே! எல்லாப் பழத்தையும் கொடுத்துவிடுகிறீரா, அம்மாளிடம் போய் சொல்லவா ?

ரா. நான் ஒரு பழம்தானே எடுத்துக்கொண்டேன் ?

தோ. மற்றது எங்கே ?

ரா. என்னைக் கேட்டால் ?

தோ. பிறகு யார் எடுத்தது ?—ஐயா, தாங்களோ ?

த. ஏ!—நானோ ?—ஓஹோ !—நீ பார்த்தையா ?

தோ. அதெல்லாம் உதவாது, உங்கள் பாடு—அரசே, கொடுத்து விடுகிறீரா, அம்மாளிடம் போய்ச சொல்லிவிடவா?

ரா. போய்ச் சொல்போ, பயமோ?

தோ. இதோ போய்சசொல்லுகிறேன். [வேகமாய் போகிறாள்.]

த. துதுது! எத்தனிதரம் நான் சொலரது இவங்களோடே எல்லாம் சண்டெ போடவாணும் இண்ணு! இப்போ மஹாராணி வந்து கேட்டா என்ன சொல்ரது ? இந்தா, அந்தப் பழத்தெயும் கொடுத்துடு, எனக்கு ஒண்ணும் தெரியாதிண்ணு சொல்லிடு.

ரா. சீ! அதெல்லாம் பொய் பேசக்கூடாது. அம்மா சொல்லவில்லையா பொய் பேசக்கூடாதென்று ?

த. சரிதான, நிஜத்தை சொன்னா பூசைதான், அதிலேயும் நீ செல்லம்—ராஜகுமாரன்,—பூசை யெலலாம் எனக்குத் தான் !

ரா. அம்மாளிடம் நான கேட்டுக்கொள்கிறேன் உன்னை தண்டிக்காதிருக்கும்படி.

த. பிரயோஜனமில்லே. நேத்தே சொன்னுங்களெ இல்லியோ இனிமேலே உனக்காக இவனே மன்னிக்க மாட்டேன் இண்ணு ?

ரா. நான் கேட்டுக் கொள்கிறேன் பார்.

த. எனன்ணு இண்ணு கேப்பே ?

ரா. உம்—நீ, அம்மாளைப்போல கேள், நான் சொல்லுறேன் !

த. அதுக்கு எனக்கொரு சிம்மாசனம் வோணும், ஆடெயெல்லாம் வோணுமே—

ரா. [சுற்றி பார்த்து ஒரு பீடதகை எடுத்து வந்து போடுகிறுன] இந்தா சிம்மாசனம், இந்தா ஆடை.

த. ஆ ! [பீடத்தில் உட்கார்ந்து, தலையைத துணியால் மூடி மஹாராணியின் குரலைப்போல் தன்குரலை மாற்றிப் பேசுகிறுன்.]

அடா! கண்மணி! ராஜசிம்ஹா! இப்படிவா உக்காரிப்படி.

ரா. நான் கீழே உட்காரவோ ?

த. நான் மஹாராணி யலல ?

ரா. ஓஹோ ! ஆகட்டும், ஆகட்டும் ! [உட்காருகிறுன்.]

த. என்னடா, துஷ்டனுய்விட்டே ! என் சொற்படி கேட்க மாட்டே ?

ரா. அப்படி இல்லையே அம்மணி,—

த. ராஜசிம்ஹா, அதென்ணு அந்தப் பழங்களை யெலலாம் எடுததுக் கொண்டாயாமே ? பூஜைக்கு வைத்திருந்த பலகாரததெ யெலலாம திண்ணுட்டாயாமே ?

ரா. அம்மணி. அவ்வளவும் பொய் ! நான் அந்தப் பலகாரததைக் கொஞ்சம்கூட தின்னவில்லை. என்னோடுகூட ஒரு தடி மொத்து குண்டு தொப்பை இருக்கிறதே, அது தான் தின்று விட்டது. ஒரு பழம் தவிர மற்றப் பழங்களை யெல்லாங்கூட அது தான் எடுத்துக்கொண்டது.

த. அது யார் அது, எனக்குத் தெரியலியே ?

ரா. தெரியுமா !

த. ஓகோ! தத்தனா?—சீச்சீ! அவன் ரொம்ப நல்லவனாச்சே! அவன் அப்படி செய்யமாட்டானே, அவனையா அப்படி திட்டினாய்? சே! பாவம்! அவனுக்கு அரமனையிலே சாப்பாடு சரியா போடுகிறதில்லையாம். வர வர இளைத்துப் போகுறானே!

ரா. ஐயோ, பாபம்! போதும், போதும், எழுந்திரு எழுந்திரு, நான் மஹாராணி, நீ நான்—நீ கேள்.

[பீடத்தில உட்கார்ந்து தலையை மூடிக்கொள்கிறான்.]

த. அம்மணி, என்னை எதுக்காக அழெசசிங்கோ?

ரா. ராஜசிம்ஹா! என்னடா இது, வர வர மிகவும் துஷ்டனாகிறாய்? நேற்றைத்தினம்தான் தண்டித்தேனே. இன்னும் புத்தி வரவில்லையா? பூஜைக்கு வைத்திருந்த பழத்தையும் பலகாரத்தையும் எடுததுத தினறுவிட்டாயாமே?

த. அம்மணி அம்மணி! அவவளவும் பொய்! நான் என் கண்ணாலே! பாக்கலே ஆணைப்படிக்கி!

ரா. ராஜசிம்ஹா! பொய் பேசவுங் கற்றுக்கொண்டாயோ? உன் பேரில தவறொனறு மில்லை. எல்லாம் துஷ்ட சகவாசம். அந்தப் பெரும் பூதம் ஒன்றிருக்கிறதே, திண்டிபோது தடி மொதது, அதனுடன் பழகி நீயும் கெடுகிறாய்—

த. ஏ! அது யாா,, அம்மணி, அது?

ரா. எந்நேரமும் உன்னுடனேயே இருக்கிறானே குண்டோதரன்—

த. ஓகோ! தததனா? சே; சே! அவனே திட்டாதிங்கோ அம்மணி! அவன் ரொமப நலல வனாசசே! ரொமப புததி சாலி, யுக்திசாலி! அவனாலேதான் நான் நலல வழியிலே பழகி வாரேன். எனக்குப் படடாபிஷேகம பண்ணும் போது அவனுக்குப் மொதல மந்திரி வேலெ பண்ணி வைக்கவோணுமிண ணலலோ கேக்கலா மிண்ணு இருக்கிறேன்—

திடீரென்று குமுதசுந்தரி வருகிறாள்.

கு. அப்படியே ஆகட்டும், தததா! அப்படியே ஆகட்டும்!

ரா. அம்மணி!—நமஸ்காரம், அம்மணி. [வணங்குகிறான்.]

கு. போதும்,—இதில் குறைவில்லை!—என்னடா ராஜசிம்ஹா, எப்பொழுது பார்த்தாலும் துஷ்டத்தனமா ?

ரா. இல்லை, அம்மணி,

த. ஆமாம்; அம்மணி.

கு. என்ன இல்லை அம்மணி? பூஜைக்குக் கொண்டுவந்த பழங்களை யெல்லாம் எடுத்துக்கொண்டாயாமே ?

ரா. விளையாடினேன், அம்மணி.

த. ஆமாம் அம்மணி.

கு. என்ன, விளையாட்டு? வயது பதினெட்டாகிறது இன்னுமா விளையாட்டு? அதிலும் அரண்மனை தாதிகளுடனா விளையாடுவது ? உன அந்தஸ்தைப் பார்க்கவேண்டாமா ? என்னைக் கேட்டால் நான் கொடுக்கமாட்டேனா ?

ரா இனிமேல் செய்யவில்லை, அம்மணி.

த. ஆமாம், அம்மணி,

கு. ஆமாம், இப்பொழுது இல்லை எனறு சொல்லிவிடு; இன்னும் கொஞ்சம் நேரததிற்கெல்லாம் வேறு யுக்தி ஏதாவது செய்யப் போகிறாய் !

ரா ஆமாம், அம்மணி.

த. ஆமாம், அம்மணி.

கு. அடே தத்தா, வா இப்படி என்னெதிரில். அங்கே என்ன செய்கிறாய் ?—அவன் கெடுவதெல்லாம் உன்னால் தான்.

த. இல்லை, அம்மணி !

கு. நீ தானே அவனுக்குப் பலகாரம் வைததிருக்குமிடம் சொல்லிக் கொடுத்தாய், இல்லாவிட்டால் அவனுக்கு எப்படித் தெரியும்?

த. ஆமாம், அம்மணி.

கு. எங்கே அந்தப் பலகாரமெல்லாம் ? தின்றுவிட்டீர்களா இரண்டு பெயருமாக ?

த. இல்லெ அம்மணி.

ரா. எங்கே அது ?

த. எங்கிட்ட இருக்குது அம்மணி!

கு. எங்கே ?

ரா. அப்படி கேளுங்கள் அம்மணி!

த. உம், உம்—எடுக்க முடியாது அம்மணி.—வவுத்திலே இருக்குது அம்மணி !

கு, தத்தா ! தின்னவில்லை என்ருயே ? பொய்யா பேசினுய் ?

த, இல்லெ, அம்மணி! நாங்க ரெண்டு பேருமா திண்ணலே, நான் மாத்திரம் திண்ணூட்டேன்.

கு. அவ்வளவையுமா ! எப்படித் தினருய் அடா ?

த. இப்ப இன்னம் அவவளவு வரவமெழசசிங்கண்ணு திண்ணு காம்பிக்கரேன் அம்மணி.

கு. ஓ ! தின்றது போதாதோ ? தப்பு செய்தது மல்லாமல் இது ஒன்ரு ? இனிமேல மன்னிப்பதில் பிரயோஜனமில்லே, உனக்குத தக்கபடி தண்டனை விதிக்கவேண்டும். மத்தியான போஜனம் கிடையா துனக்கு இன்றைக்கு போ !

த. அம்மணி ! அம்மணி ! வேறே என்ன வேணு முண்ணாலும் செய்யுங்க இது மாதரம் வாணும். நான் செத்துப்பூடுவேன் அப்றம்— [கீழே விழுந்து விடுகிருன்.]

ரா. அடடே, கீழே விழாதே ! உன்னே யார் தூக்குகிறது அப்புறம் ?— அம்மணி ! [நமஸ்காரம் செய்கிருன்.]

கு. இந்த நமஸ்காரமெல்லாம் உதவாது. மன்னித்த திது வரையிற் போதும்

ரா. அம்மணி, இதுதான் கடைசி முறை. என்பொருட்டு மன்னியும் அம்மணி, தத்தனே.

கு. எத்தனேதரம் கடைசி முறை ?

ரா. இது கடைசி கடைசி முறை; இனி நான் உத்தரவாதம். இனி இவன் தவறு செய்தால் என்னேத் தண்டியும்.

கு. இப்படித்தானே அவனேக் கெடுக்கிருய் நீ ?

த. ஆமாம், அம்மணி ஆமாம் !

கு. சரி, போதும், எழுந்திரு அம்மட்டும்—யாரடா அங்கே சேவகன் ?

ரா. இல்லே, இல்லே, அம்மணி, நான் தூக்குகிறேன்.—அப்பா ! [எழச் செய்கிருன்.]

கு. அதிருக்கட்டும்—முன்னமே கேட்க மறந்தேன். இன்னும் பள்ளிக்கூடம் விடவில்லேயே ? இதற்குள்ளாக அரண்மனேக்கு யார் வரச் சொன்னது உன்னே ?

ரா. நான் உபாத்தியாயருக்கு விடுமுறை விட்டுவிட்டேனம்மணி இன்றைக்கு !

கு. என்ன ? அவர் உனக்கு விடுமுறை கொடுப்பதோ அல்லது நீ அவருக்கு விடுமுறை கொடுப்பதோ ?—இதென்னடா ராஜசிம்ஹா ? அவர் எப்பொழுது பார்த்தாலும் உன்மீது குறை சொல்லுகிறார். அவர் ஒரு பாடம் கொடுத்தால் நீ வேறு வேலை செய்கிறாயாம் எந்நேரமும் ஏதாவது கவனம் செய்து கொண்டிருக்கிறாயாமே, உண்மைதானா ?

த. ஆமாம், அம்மணி. இண்ணைக்கிகூட வாத்யார்மேலே ஒரு கவளம் பண்ணேம் !

கு. என்ன அது ?

ரா. தத்தா, ஊத்தை வாயங்காத்தல் என்று வாயை மூடு! எந்நேரமும் கவளம் தான் !

கு. ராஜசிம்ஹா உபாத்யார்மீதா கவனம் செய்தாய் ? ஏதோ சொல் கேட்போம்.

ரா. தத்தா, காலை கற்பித்தேனே, ஞாபக மிருக்கிறதா சொல்.

த. "தவர்புகழ் மாமுனிப் பெயர்தகு சாத்தன்
கவருறு மவர்புகழ் அவனியிற் காணீர்—உம்

ரா. உவர்தரு மானீர் உலகினி[ெ]லெங்கும்,—

த. அவர்வரு முனர்வரு மவர்பெருந் தொப்பை!"

கு. கண்ணே ! உன புத்தியே புத்தி ! [தழுவிக் கொள்கிறாள்.]

ரா. அம்மா, நான் நன்றாகப் படித்து உமது மனத்தைச் சந்தோஷப்படுத்தினால் நான் கேட்டதை யெல்லாம் கொடுக்கிறேன் என்றீர்களே ?

கு. என்னடா வேணும் ? என் கண்மணி !

ரா. உம்முடைய பள்ளியறைப் பக்கத்தறைச் சாவி வேண்டும். அதற்குள்ளே என்ன இருக்கிறது நான் பார்க்க வேண்டும்; அங்கே போய் நான் விளையாட வேண்டும்.

கு. ராஜசிம்ஹா ! ராஜசிம்ஹா ! அது வேணடாமடா. அது தவிர வேறு ஏதாவது கேள் என் கண்ணல்ல ! என் கண்மணியல்ல ! என் கட்டிக் கரும்பல்லா ! என் செல்வமல்ல!

ரா. வேறெதுவும் வேண்டாம் எனக்கு.

கு. ராஜசிம்ஹா, நான் சொல்வதைக்கேள். என சொல்லைத் தட்டலாமா நீ? நீ அங்கே போகக் கூடாது. போனால் எனக்குப் பெரும துக்கம் நேரிடும்.—என் மீது கோபித்துக் கொள்ளாதே, வேறு எதையாவது கேள்.

ரா. ஆனால—அண்ணு எந்த தேசத்திற்குப் போயிருக்கிறார்கள்? அதையாவது சொல்லுங்கள்.

கு. அதெல்லாம் உனக் கென்னத்திற்கு? விளையாட ஏதாவது கேள். கௌரி பூஜையில இன்றைக்குச் சிறந்த நைவேத்திய மிருக்கிறது, வேணடுமா உனக்கு ?

ரா. அதெல்லாம எனக்கு வேண்டாம.

த. அமமணி, எனக்கு!— [கையை நீட்டுகிறான்.]

கு. தத்தா, ஒதுங்கு.
[தத்தன் பினபுறம வந்து ராஜமகிஷியின் திறவுகோலை மெல்ல எடுத்துக்கொண்டு, ராஜசிம்ஹனுக்குச் சைகை செய்கிறான்.]
கண்ணே! உன முகம வாடி நிற்க நான் பார்ப்பதா? வேறு எதையாவது கேள்.

ரா. ஆனால் தினம ஏன் நீங்கள் கௌரி பூஜை செய்கிறீர்கள்? அதையாவது சொல்லுங்கள.

கு. ஈசனே ஜகதீசனே!—

ரா. போங்கள், அம்மணி. எதைக் கேட்டாலும் நீங்கள் சொல்லமாட்டேனென்கிறீர்கள். [அழுகிறான்]

கு. கண்ணல்ல! அழாதே!—நம்முடைய நன்மைக்காகவே செய்கிறேன், சரிதானா? நீ அழாதே! [கண்ணீரைத் துடைத்து.] யார் அங்கே ?

தோழி வருகிறாள்.

தோ. அம்மா.

கு. அதோ—நைவேத்தியமா யிருக்கிற பலகாரத் தாம்பாளம் ஒன்று எடுத்துவா.
[தோழி போகிறாள். தத்தன் அதிகமாயழ ஆரம்பிக்கிறான்]
தத்தா, நீ ஏனடா அழுகிறாய் ?

த. உம்—உம்! [இன்னும் அதிகமா யழுகிறான்.]

ரா. தததா, என்ன சமாசாரம் ?

கு. ஏன் அழுகிறாய் தேம்பித் தேம்பி?

த. எனக்குப் பலகார மில்லையோ?—உம்—உம்—[அழுகிறான.]

கு. இதற்கா அழுகிறாய்?—உனக்கும் தருகிறேன், அழாதே.

மறுபடியும் தோழி தாம்பாளத்தில் தின்பண்டத்துடன் வருகிறாள்.

கு. ராஜசிம்ஹா, உனக் கிஷ்டமானதை எடுத்துக் கொள்.

ரா. [ஒன்றெடுத்துக் கொண்டு] போதும் எனக்கு.

கு. தத்தா, நீ எடுத்துக்கொள்.

த. ஆ! [எல்லாவற்றையும் எடுத்துக்கொள்ள முயல்கிறான்]

கு. இஷ்டமானது ஒன்று!

த. ஆனால—அந்தத் தட்டு வேணும்.

கு. அப்படியே—அடி, அந்த தாம்பாளத்தை மாத்திரம் அவனிடம் கொடுத்துவிட்டு பலகாரத்தை எடுத்துக்கொண்டு போய்விடு

[அப்படியே தோழி செய்ய எல்லோரும் நகைக்கிறார்கள். ராஜசிம்ஹா, நான் வரட்டுமா? சந்தோஷமாய் விளையாடு இனி [போகிறாள்.]

ரா. தத்தா, அந்தத் தட்டில பாதி தருகிறாயா தின்பதற்கு?

த. ஆவுட்டும், ஆவுட்டும். இதோ பாதியா சாவி!

ரா. எதோ? எதோ? இப்படிக் கொடு, இப்படிக் கொடு.

த. அந்தப் பலகாரத்தெ முன்னே வை தாரேன்

ரா. இதோ, இதோ! [கொடுத்து] சாவியைக் கொடு.

த. இனெண்ணு, அந்த அறையிலே என்ன பலகாரம் இருந்தாலும் என்னுது!

ரா. சரிதான், சரிதான்! [திறவுகோலை எடுத்துக்கொண்டு] அம்மாளுக்குத் தெரியாமல் திறந்து பார்க்கவேண்டும் [ஓடிப்போகிறான்.]

த. இதோ வந்து விட்டேன் நானும் [போகிறான்.]

## இரண்டாவது காட்சி

**இடம்—அரண்மனையிலோர் அறை. காலம்—காலை**

**ராஜசிம்ஹன் கதவைத் திறந்து உள்ளே நுழைகிறான்.**

ரா. இங்கே என்ன இருக்கிறதென்று நான் சீக்கிரம் கண்டறிய—வேண்டும் நான் இங்கிருக்கும்போது அம்மா பார்த்துவிட்டால கஷ்டம்!—என்ன இருக்கிறது இங்கே? ஏன் நான் இதற்குள் போகக்கூடாதென்று அம்மா தடுத்து வந்தார்கள்? ஏதாவது இருக்கும்—ஆ! என்ன சிறந்த கவசம்!—உடைவாள்!—என்ன கூர்மையானது!

என்ன விலை யுயர்ந்தது! என் தந்தையினதா யிருக்கலாம்! —சுழற்றிப் பார்ப்போம்.

[ஒரு சுவரில தன் தநதையின் சித்திரப்படம் இருப்பதைக்கண்டு]

ஆ! யாருடைய படம்? மஹாராஜவினதா யிருக்க வேண்டும்—என் முக ஜாடை யிருக்கிறது.—இது தகப்பனா விடுதியா யிருககவேண்டும. அப்படியாயின் இதை நான ஏன பாரக்கலாகா தென்று அம்மா கூறினார்கள்? இதைப் பாரததால் அவர்களுக்கேன் துக்க முணடாக வேண்டும்? இன்னும் இதில ஏதோ இருக்கவேண்டும். நன்றாகப் பார்ப்போம்—இது என்ன புஸ்தகம்? [படித்து] "வேதாள உலகம"—எனனவோ மூடி யிருக்கிறது—

[அங்கிருக்கும் ஒரு படததின் மீதிருந்த திரையை நீக்கி]

இது சித்திரமோ, நிஜ உருவமோ?—சிததிரந்தான. சித திரம் வரைவோன தன் திறம் காட்ட வரைந்த உருவமோ? அலலது உயிருடைய அணங்கின் உருவமோ? யாரா யிருக்கலாம்?

திடீரென்று கதவைத் திறந்துகொண்டு தத்தன் வருகிறான்.

த. பாதி யெனககு! பாதி யெனக்கு!—என்ன செய்ரே யிங்கே? எங்கே பலகாரமெலலாம்? திண்ணுட்டியா நீ மாத்ரம்?

ரா. தததா!

தாவிய வான்மதியந் தனை நிகர் வதனத்தாள்
காவிய நயனததாள் கருமுகி லளகத்தாள்
மேவிய வெழில்மிக்காள் மேதினி யிடையுறற
ஓவிய முறுபாவை ஒணனுத லிவளாரோ?

த. ஏ! பொமமெ படததெ பாததுக்கினு, இதென்ன இது? சொலலு சீக்கிரம. எனக்கு ரொமப பசிக்குதிண்ணு!

ரா. தததா, இப் பெண்மணியின் பேரழகை என்னென் றுரைப்பேன்.

வண்டோ எனும் விழியாள்—வளை
வில்லோ எனும் நுதலாள்
கண்டோ எனும இதழாள்—உயர்
கமுகோ எனும் களத்தாள்

விண்டோ எனும் தனத்தாள்—விரி
கதிரோன் மிகும் ஒளியாள்
உண்டோ எனும் இடையாள்—அதி
உத்தமி யிவ ளாரோ ?–தெரியுமா உனக்கு ?

த. எல்லாந் தெரிஞ்சுது ! நானாவது தேடிப்பார்க்கிறேன். சாப் பாட்டு வேளெயாயி போச்சி, திண்றதுக்கு ஒண்ணுங் காணோம் ! இங்கே என்னமானு இருக்கும்னு நான் இத் தினி நாள் கஷ்டப்பட்டு சாவியை யெடுத்துக் கொடுத்தா, படத்தெ பார்த்து பாட்டு பாடிக்கினு பயித்தியம் !—

ரா. ஆஹா ! தத்தா, கண்பெற்ற பேறு கிடைத்தது.

த. ஓ, ஓ ! சரிதான். இதுக்குத்தான மஹாராணி உன்னே இந்த அறெக்குள்ளே போவக்கூடாதிண்ணு சொன் னுங்க ! சரி, சரி ! இந்த அறெக்குள்ளே போனா அங்கே ஒரு பிசாசி இருக்குது, புடிச்சிக்கும்னு சொன்னுங் களே, அது நிஜமாப் போச்சு !—உம் ! எனனுத்துக்குக் கூப்பிட்டே ?—இப்பவே சொனனேன பாட்டு கீட்டு பாடாதெ, சொனனுகேளு— [ராஜசிம்ஹன் பாட] திரியும் பாரு, எழுவெடுதத பாட்டு.—இப்ப பசிக்கு தெனக்கு ! சாப்பிட வாரையா குரியா ? அமமா கிட்ட போய் சொலலிடவா ?

ரா. இன்னற் களைதீர எழிலாள் கனியிதழின்
துனனுமமுத தங்கிடக்கத தூயவனே—பன்னின
பசிதீரந் திடலாமே பாரினிலவே றேதும
உசிதமு மாமோ உரை ?

த. அததெ சாப்டா வவுறு ரொமபி பூடுமோ ?

ரா. உடனெ முழுதும நிரமபும இனபம ! [முத்தந் தருகிறான.]

த. ஏ, ஏ ! அமமா கிடட சொல்கிறேன அதோ வாராஙக, அப்படியா சமாசாரம் ?

ரா. எதோ அம்மா ? எதோ ?

த. அதோ வாராங்க.

ரா. தததா. தததா ! வா, வா. நாம் எங்கேயாவது ஒளித்து க்கொள்வோம், ஒளித்துக் கொள்வோம். அம்மா பார்த் தால கோபித்துக் கொள்வார்கள்.

த. ஆமாம், ஆமாம் [இருவரும் ஒளிந்து கொள்கிறார்கள்.]

குமுதசுந்தரி வருகிறாள்.

கு. ஆ! பார்த்தையா! கதவு திறந்திருக்கிறது! நினைத்தேன், நினைத்தேன! யாரோ சாவியை வேண்டுமென்று திருடிக் கொண்டு போயிருக்கவேண்டும! யாரோ இங்கே உள்ளே வந்திருக்கிறார்கள்! இது யார வேலை? இதை யெப்படி யாவது விசாரித் தறியவேண்டும். பிறகு—நம்முடைய நித்திய கடனைச சீக்கிரம முடித்துச செல்வோம,—அம்பிகா! இன்னும் எத்தனைக் காலந்தான் நீ யென்னை யிக் கோலங் காட்டப் போகிறாயோ?

[அரசன் படத்திற்கு மாலை முதலியன அணிகிறாள.]

பிராணநாதா! பிராணநாதா! உம்மை அடியாள் மறுபடி எந்த ஜன்மத்தில காணபது? இந்த ஜனமத்தில காண பேன் என்னும் ஆசையை விட்டேன், விட்டேன! பிராண நாதா! பிராணநாதா! நான வேண்டாமென்று எவவளவு மறுத்தும் அப் பாதகியை நாடி அவ் வேதாள உலகம் சென்றீரே! ஐயோ! நீர அங்கு என்ன கதியா யிருக்கிறீரோ? என்னவாகச சபிக்கப்பட்டீரோ? அச சாபத்தினின்றும் உம்மை நீக்குவதெப்படி? பேதை யென்றா லென்ன முடியும? ஐயோ! நமது மைந்தன் ராஜ சிம்ஹனுக்கு வயது வந்தால அவனாவது என் கவலையைத தீர்ப்பானென்று எண்ணி மகிழ்ந்திருந்தேன; அவனோ இப்போது பதினெட்டு வயதாகியும அறியாப் பாலனைப் போல விளையாட்டின மீதே மனமுள்ளவனாயிருக்கிறான். அவனுக்கு விஷயங்களை யெல்லாமசொல்லி யென்ன பிரயோஜனம?—கண்ணே! ராஜசிம்ஹா! ராஜசிம்ஹா!

[ராஜசிம்ஹன் மெல்லவந்து, அன்னையின் பக்கத்தி லுட்கார்ந்து]

ரா. அம்மா!

கு. ஆ! ராஜசிம்ஹா! எங்கிருந்தாய் நீ? நீயா என் சாவியை எடுத்து வைத்திருந்தாய்?

ரா. ஆமாம், அதிருக்கட்டும். அம்மணி, ஏன் என்பொருட் டாக சற்று முன்பு கண்ணீர்விட டழுதீர்கள்?

கு. கண்ணே, நான் சொன்னதை யெல்லாம் கேட்டுக்கொண் டிருந்தாயா என்ன?

ரா. ஆம் அம்மணி, மன்னியு மென்னை. அம்மா, என் பொருட்டு ஏன் உமக்குத துக்கம்? நான் செய்யவேண் டிய தினனதென்று சொலலும். நான் எப்படியும் செய்து முடிககிறேன் பாரும. நான சிறு பிராயததுக குணமுள்ளவனு யிருககிறேனெனறு உமக்குக கொஞச மேனும் எண்ணம் வேணடாம.

கு. கணணே, இப்பொழுது நீ செய்யவேண்டிய தொன்று மிலலையடா. நான் சொலவதைக்கேள். இன்னும் உனக் குத் தக்க வயது வரட்டும். பிறகு சொலலுகிறேன்.

ரா. அதெலலாம் உதவாது அம்மணி, இன்று நீர ஆதியோ டந்தமாக என் தந்தையின விர்ததாந்ததைதை யெல்லாம் எனக்குசசொன்னுலொழிய நான் போஜனம் கொள்ளேன்.

த. [வெளி வந்து] ஏ, ஏ! அப்படி செய்யாதே! எனக்குச் சாப்பாடு அப்றம்?

ரா. அதெல்லாம் உதவாது நான் போஜனங் கொள்ளேன். ஒரே வார்த்தை.

கு. என்ன கஷ்ட காலமாய் முடிந்தது! நீ ஒரு பிடிவாதம் பிடிததால அதை மாற்றுவது யார்? ராஜசிம்ஹா, சொலலுகிறேன் கேள். அநேக வருஷங்களுக்குமுன், நீ கைக் குழநதையா யிருந்தபோது, யாரோ ஒருவன் வடக்கிலிருந்து வந்து ஒரு படததை உன் தந்தையிடங் கொடுதது, வேதாள உலகம என்று பிரதேச மிருப்பதா யும், அததேசத தரசன புதலவியின் படம் அது வென் றும், அவள் என்றும அழியா யௌவன முடையவ ளென்றும், அவளைப் போன்ற வடிவழகிகள் இவ்வுலகி லேயே இல்லை யென்றும் கூறி, அவர் மனத்தைக் கலைக்க, அவர் அப்படத்தைப் பார்த்து மோகங்கொண்டு அப்பெண் ணை த தான் எப்படியாவது மணம் புரியவேண்டுமென்று சொலல, நான் எவ்வளவோ தடுததுங் கேளாது அத் தேசத்தை நாடிச் சென்றவர் இன்னுந் திரும்பி வந்தவ ரன்று. அதுமுதல் இந்த ராஜ்யபாரத்தை உன்பொருட்டு

நான் வகித்து வருகிறேன் உன் தந்தை என்ன கதி யானாரோ அறிகிலேன். உயிரோ டிருக்கிறாரோ அல்லது ஏக கதியாயினாரோ அறிகிலேன ; அவர் எப்படியாவது உயிருடன் திரும்பி வரவேண்டுமெனறே கௌரியைக் குறித்து தினம் நான் பூஜை செய்துவருவது.

ரா. அம்மா, எப்படியாவது நான் அத்தேசம் போய் என் தந்தையை மீட்டு வரவேண்டும். அத் தேசம எங்கிருக்கிறது சொல்லும்.

கு. கண்ணே, ராஜசிம்ஹா, அவசரப்படாதே நீ, இன்னுங் கொஞ்சம வருஷம் போகட்டும. பிறகு நீ யிவ் வேலையைப் பற்றி யோசிக்கலாம், நீ சிறு குழந்தை—

ரா. குழந்தை!—அம்மா, இதோ இன்றைத்தினமே இக்கடனை மேற்பூண்டு இந்நாட்டை விட்டுச் செல்கிறேன். இன்னும் ஒரு வருஷத்திற்குள்ளாக என தந்தையையாவது உயிருடன உடம்பிடன கொண்டுவந்து சேர்க்கிறேன். இல்லாவிடில் இப் பிரயத்தனத்தில் நானாவது மடிகிறேன. இது சத்தியம.

கு. அடடா, ராஜசிம்ஹா! ஐயோ ஏனடா சத்தியம் செய்தாய்? ஒரு வருஷம் உன்னைப் பிரிந்து எப்படி யிருப்பேன்? ஐயோ! இதுவோ வெகு அசாத்தியமான காரியம்! ஒரு வேளை யுன்னு லாகாவிட்டால் பிறகு என் கதியென்னவாவது? உன் தந்தையைப் பிரிந்த காலமுதல் நான் உன் முகம் நோக்கி மகிழ்ந்தே உயிர் தரித்து வருகிறேன்.

ரா. அம்மணி, ஒரு வருஷகாலம் பொறுத்திரும்.

கு. ஐயோ! மைந்தா, இந்த ஒரு வருஷ காலம் நான் எப்படி உயிர் தரிப்பேன்?

ரா. அம்மணி, நான சத்தியஞ் செய்து விட்டேன். பிறகு இவைகளை யெல்லாம் நீர் யோசித்து வருந்தி என்ன பலன்? அம்மணி, எனக்குச சீக்கிரம் விடை யளியும் அந்தத் தேசத்திற்குப் போக வழியினைக் கூறி.

கு. எனக் கொன்றுந் தெரியாதே! எதோ ஒரு புஸ்தகம் இங்கிருந்தது. அதில் எல்லாம் எழுதி யிருந்தது.—அதோ அப் புஸ்தகம்—ஹா! ராஜசிம்ஹா! இப் படத்தைப் பார்த்து விட்டனையா நீ?

த. அதெதெ கேளுங்க! பார்த்தது மாதரமா? அதே பயித்தியம்! இதனி நேரம் நீஙக வர்ரதுக்கு மின்னே அதெதெ கட்டிக்கினு முகதி இட்டுக்குனு இருந்துது! சாப்பாடுகூட வாணுமாம. இதுக்கு முத்தியிட்டுக்கினே யிருந்தா போதுமாம.

கு. ஐயோ! தெரியும, தெரியும்! இதற்காகத்தான இத்தனை காலம நீ யிந்த அறைகருள் வரக்கூடாதென்று கட்டளை யிட்டிருந்தேன. ஐயோ! இம மாயக கள்ளியின படத்தைப் பார்த்துவிட்டனையா நீயும? அவள் மோக வலையிற பட்டனையா நீயும்? ராஜசிம்ஹா! ராஜசிமஹா!

த. அதுக்குததான அநத ஊருக்குப் போரவழி தெரியணுமாம, தெரியலே?

கு. கண்ணே, ராஜசிம்ஹா, நீ உன் தந்தையையும மீட்க வேண்டாம், ஒன்றும வேண்டாம். நீ உயிருடன் என கண்முன னிருந்தாற் போது மெனக்கு.

ரா. அம்மா தாங்களும் இந்த புத்தியற்றவனைப்போல என்னையும் எண்ணுவதா? நான் சத்தியம் செய்திருக்கிறே னென்பதை மறந்து பேசுகிறீர்களே?

கு. அப்படியல்ல, கண்ணே, இவள்மீது நீ இசசை வைத்து விட்டால் பிறகு உன் தந்தையை நீ மீட்டுவருவது அசாத்தியம், உன் தந்தையை யிக் கோலங் கண்ட பாவியைத் தண்டிப்பதை விட்டு அவள்மீது நீ இசசை வைக்கலாமா?

ரா. ஆனால் கேளும். இவள் என் தந்தையை யேதாவது ஹிம்சைப்படுத்தி யிருந்தால், என் தந்தையை மீட்டு வரும்போது இவளையும் தம்முன கொண்டுவந்து விடுகிறேன். நீர் உமது இச்சைப்படி தண்டியும்.

த. ஆமாம், அங்கே போயி, கல்லியாணம் பண்ணிக்கினு உக்காந்துக்கினு, திரும்பி வர்ரதேது?—

ரா. அம்மணி, உமது உத்தரவின்றி நான் மணம் புரிவதே யில்லை. இப்பொழுது சம்மதிதானு ?

கு. ஆயினும் கண்ணே, இன்னும் சில வருஷங்கள் சென்ற பிறகு நீ புறப்பட லாகாதா ? அறியாப் பாலகனுகிய நீ அருங் கானகங்க ளெல்லாங் கடந்து அத் தூர தேசத் திற் கெப்படிப் போவது ?

ரா. அம்மணி, அந்தக் கவலை யெல்லாம் உமக்கு வேண்டாம். அம்மணி, நான் சபதம செய்தாய் விட்டது. இனி யெனக்குச சந்தோஷமாய் விடையளியும். போகவேண் டிய மார்க்கத்தை இப் புஸ்தகத்தினின்றுந் தெரிந்து கொள்கிறேன்.

கு. இன்றைத்தினமே புறப்பட வேண்டுமா ?

ரா. ஆம், அம்மணி

கு. இந்தப் பிடிவாதத்திற்கு என்ன செய்வது ?

தோழி வருகிருள்.

தோ. எமதரசியே, அரண்மனைப் புரோகிதர் நெடுநேரமாகத் தம்மைக் காணவேண்டுமென்று காத்திருக்கிருர்.

கு. இதோ வந்துவிட்டதாகச் சொல.—ராஜசிம்ஹா, அவரைக் கேட்டு நல்ல சுப காலத்தைப் பார்க்கிறேன் நீ புறப்பட.

ரா. ஆமாம், இன்றைக்குள் இருக்கவேண்டும்

கு. அப்படியே, நான் வருகிறேன். [போகிருள்.]

தோ. அரசே, இது யாருடைய படம் ?—என்ன—சுந்தரி ! என்ன சுந்தரி !—

ரா. சரிதான், நீ போ.— [படத்தை மூட, தோழி போகிருள்.] தத்தா, நான் போய் வரவா, விடை கொடு.

த. என்ன, என்ன ?

ரா. நான் போய் வருகிறேன், விடை கொடு.

த. ஊம்.—நான் இல்லாதே நீ பூடுவியோ ?

ரா. தத்தா, நான் சொல்வதைக் கேள். ஒன்றிரண்டு நாட்க ளல்லவே ? ஒரு வருஷ காலஞ் செல்லும் குறைந்த பட்சம்.

த. ஆறு ?

ரா. அதுவும் காடாந்தகாரங்களை யெல்லாம் கடந்து செல்ல வேண்டும் ; எளிதல்ல ; ஆரண்மனையில் சுகமாய் மூன்று

முறை சாப்பிட்டுவிட் டிருப்பதைவிட்டு என்னுடன உழலு வானேன நீ?

த. ஆறு, என்னொதவி யில்லாதே நீ போயி இந்த கார்யத்தெ முடிச்சிக்கினு வந்துடுவியோ? உன்னெக் காப்பாத்ரது யாரு இந்த ஒரு வர்ஷமும் நான் இல்லாப்போறு?

ரா. நீதான் காப்பாற்றப் போகிறாயோ?

த. ஊம் — இதெல்லாம் என்னாத்துக்கு? நான் வர்ரது உனக்கு இஷ்ட மில்லெ. நீ வேற வேலெயா போறையே, நான் வந்தா கஷ்டமா தான இருக்கும். அதெதெ சொல்ரதுதனே?

ரா. சீ! தத்தா, அப்படி யொன்று மிலலே, நான் என் தாயாருக்குக் கூறிய உறுதி மொழியைக் கேட்கவில்லையா நீ?

த. அப்படியாறு அழெச்சிக்கினு போ என்னெ கூட.

ரா. உனக்குத்தான் கஷ்டம, இப்பொழுதே சொன்னேன்.

த. நீ யென்ன அழெச்சிக்கினு போரையா, இலலையா?

ரா. அப்பா! மிகவும் கோபமா யிருகிறதே—மாட்டேன்.

த. நீ அழெச்சிக்கினு போவாப் போறு எனக்குச் செய்ரது தெரியாதோ?

ரா. என்ன செய்வாய்?

த. அழெச்சிக்கினு போவாப் போறு—நான்கூட வந்துட்ரேன்!

ரா. தத்தா, தத்தா! மெச்சினேன்—வா என்னுடன்.

த. ஊம்.—பயமிருக்கட்டும். இண்ணெக்கே புறப்படணும் இண்ணியே ஏற்பாடெல்லாம் பண்ணிவிட்டையா?

ரா. என்ன ஏற்பாடு?

த. நம்பளோடுகூட வரவாணுமா, சிப்பந்திங்க, சமயல்காருங்க பலகாரங்க, இதெல்லாம்.

ரா. ஓஹோ! அப்படியா சமாசாரம்? அதற்குத்தான் அப்பொழுதே சொன்னேன்! இதெல்லாம் உதவாது. நாம் மாத்திரம் இருவருமாகத் தனியாய்ப் போகவேண்டும். காடு மலைகளெல்லாம் கடந்துபோக வேண்டியிருக்க சிப்பந்திகளாவது?

த. ஆமாம், நீ யிருக்கிறே வேட்டெயாடிக் கொண்டார, நான் இருக்கிறேன் சாப்ட. இருவது சமயல்காரன்களுக்கு மாத்ரம் உத்தரவு செய்துட்டு வர்ரேன்.

| | |
|---|---|
| ரா. | [தடுத்து] என்ன அது? இருபது பெயராவது? ஒன்றும் வேண்டாம். |
| த. | ஆறு, பத்து பேருக்கு சொல்லிட்டு வர்ரேன். |
| ரா. | தத்தா, உனக் கென்ன பயித்தியமா? பத்து ஆட்களை நம்முடன் அழைத்துக்கொண்டு போவதாவது? வேண்டாம். |
| த. | எனக்கா பயித்யம்? அங்கே வழியிலே சாப்பாட்டுக்குத் திண்டாடும் போதல்லோ தெரியும்! போறுப்போவுது உனக்காக கொறைக்கிறேன். |
| ரா. | என்ன குறைக்கிறது? |
| த. | அஞ்சுபேருக்கு சொல்லிட்டு வர்ரேன்.— |
| ரா. | என்ன அஞ்சு பேர்? ஒருவரும் வேண்டாம். |
| த. | ஆறு தொலேச்சிக்கோ—மூணு பேரு— |
| ரா. | இதென்ன, தத்தா, பேரமா? |
| த. | ஆறு நீ யென்ன ரெண்டுபேர்லே யிர்க்கறே? |
| ரா | நாம் இரண்டு பெயருந்தான. |
| த. | கூட சமயல் பண்ண ஓர் ததன். |
| ரா | அதெல்லாம் உதவாது, ஒரே வார்த்தை ஒருவரும் வேண்டாம். |
| த. | சரி, இருக்கட்டும். ஊரெ விட்டு ரெண்டு காததூரம் போனு தெரிஞ்சுப் போவுது. இப்பவே சொன்னேன், ஞாபக மிருக்கட்டும். அப்பறம் சாப்பாடு இண்ணு என் கிட்டவா, சொல்றேன். |
| ரா. | இல்லே, போ, தத்தா, உடனே உனக்கு அதிக அவசிய மாய் வேண்டிய பொருள்களை மாத்திரம் எடுததுசசெலலச சிததம் செய். |
| த. | அப்படியே, அப்படியே. [போகிறான்.] |

# இரண்டாம் அங்கம் - முதற் காட்சி

**இடம்—அடர்ந்த கானகம். காலம்—பகல்.**

**ராஜசிம்ஹனும், தத்தனும் வருகிறார்கள்.**

த. [தரைமீது படுத்து] அப்பா! இனிமேல் என்னாலே ஒரு அடி கூட எடுத்து வைக்க முடியாது. இன்னும் போவ ணும்ணு என்னெ நீ தூக்கிக்கினுதாம் போவணும்.

ரா. தத்தா, அப்பொழுதே சொன்னேன், எனக்காக நீ எவ்வளவு கஷ்ட மனுபவிக்கிறாய், பார். வேண்டா மென்று மறுத்தும கேட்கமாட்டேன் என்று வந்தாயே; நன்றா யிளைப்பாறு.

த. ஆமாம், நான் எளப்பார்ரேன், நீ யிந்தப் பாழுங்காட்டெ விட்டுப் போரத்துக்கு வழி யெப் பாரு.

ரா. பிரம்மாண்டமாக விருட்சங்கள் நான்குபுறமும் நெருங்கி அடர்ந்திருக்கிறதால் திசைகளைக் குறிப்பதும் அசாததி யமா யிருக்கிறது.

த. அந்தப் பாழும் புஸ்தகம் ஒண்ணு தூக்கிககினு வந்தியே, அதுலெ யென்னமாறு போட்டிருக்குதா?

ரா. ஒன்றையும் காணோம், இந்தக் காட்டிற் கப்புறம் "வேதாள உலகம்" என றெழுதி யிருக்கிறது, அவ வளவுதான்.

த. அத்தெ எழுதினவன் ரொமப புத்திசாலிதான்!—இப் பவாவது நான் சொலரதெக் கேளு—வேதாள லோகமு மில்லே, கேதாள லோகமு மில்லே. எவனோ ஓாததன ஒரு படத்தெ எழுதி, கட்டுக் கதெ ஒண்ணு கட்டி வுட்டா; அத்தெ கேட்டு மஹாராஜா ஏமாநதுப்போனுரு எங்கேயோ போயி ஆப்டுக்கினு, நீ அவரே தேடிக்கினு போயி ஏமாந்துப் போவாதே. பேசாதே நம்ப ஊருககு திரும்பிப் பூடலாம.

ரா. எல்லாம் யோசிக்கிலாம், நீ கொஞ்சம் இளைப்பாறு.

த. இன்னம் யோசிக்கணுமா? ஆறு எனக்கு சாப்பாடு கொண்டா—பசிக்குது.

ரா. தத்தா, இந்தப் பாழுங்காட்டில் கனிவர்க்கமும் கிடைக்க வில்லை, மிருகங்களையும் காணோம்.

த. ஆமா பட்டினியா யிருக்றதோ? அப்பவே சொல்னேனே கேட்டிருந்தா—நம்பளோடே ஒரு பத்து வண்டி சாமா னும் இருவது சமயல்காரன்களேயும் அழைசசிக்கினு வந் திருந்தா?

ரா. இத்தனை மாதஙகளுக்குப் பதது காதந்தான் வந்திருப்போம்

த. இன்னம் உனககு அந்தப் பிடிவாதம் போகலெ அலலா? இப்பகூட ஒத்துக்கமாட்டயே நீ செய்தது தப்புணனு?

ரா. நியாயஞ் சொன்னுல ஒப்புக்கொள்ளுகிறேன்.

த. நாயம்!—இப்ப பசிக்குதே, என்ன செய்ரது?

ரா. பட்டினியா யிருககிறது—ஏதாவது அகப்படுகிற வரைக்கும்.

த. ஊம்! போனுப் போவுது, பய மிருக்கட்டும்—இந்தா, நான் இலலாப்போனுல்லோ தெரியும்;

[மூட்டையை யவிழ்ததுத தின் பண்டங்களை எடுத்து]

இந்தா கொஞ்சம். [கொடுக்கிறுன்.]

சறறு தூரததில மாதங்கன் வருகிறுன்.

த. [மாதங்கனைக் கண்டு] அடடே! இநதத காட்டிலகூட எவனே பிசசெக்கி வாராப்போலே இருககுது, சீக்ரம துண்ணுடு.

மா. ஐயா, யாரங்கே?—மனுஷாளா?

த. இல்லெ, இல்லெ, மிருகங்க; இங்கே வராதே.

மா. பேசசுக் குரல் கேடகிறதே.

த. பேசுற மிருகங்க! தூரவே நிலலு.

மா. ஐயா, கொஞ்சம தயவுசெய்து—

த. ஒரு யுக்தி பண்ரேன் [மாதஙகனிடம் செனறு]

ஐயா, பெரியவரே, ஏதாவது சாப்பிடரததுக்குக கொஞ்ச மிருக்குதா உங்ககிட்ட, ரொம்ப பசியாயிருக்குது.

மா. ஐயா, அதைத்தான் உங்களேக் கேட்கலாமென்று நான் வந்தேன். காதடைத்துக்கொண்டு போகிறது—ஒரு கவளம்!

த. எங்க கிட்ட ஒரு பருககெகூட இல்லெ!

மா. அதோ, என்னமோ தெரிகிறதே

த. உங்களுக்கு கண்ணு தெரியலே, அது மண்ணாங்கட்டி.

மா. ஆனால் அந்த மண்ணாங்கட்டியில் கொஞ்சம் கொடுங்கள் பார்ப்போம்.

த. ஏ, ஏ!

ரா. சே!—தத்தா! பாபம்! மிகவும் வயதானவர்! கொஞ்சம் கொடுப்போம்.

த. ஆனா உம் பங்குலே கொடுத்துக்கோ.

ரா. ஐயா, பெரியவரே, என்னிடம் கொஞ்சந்தானிருக்கிறது, இதைப் புசியுங்கள். [தன் பங்கைக்கொடுத்து விடுகிறான்.]

மா. [அதை வாங்கிச சாப்பிட்டு விட்டு] அப்பா! தர்மம் தலை காக்கும்! என் வயிறு குளிர்ந்ததுபோல் உன் மனமும் எப்பொழுதுங் குளிர்ந்திருக்குமாக!

த. ஆமாம், இப்போ பசியாலே வவுறு எறியுதே அதுக்கென்ன செய்ரது?

மா. எதற்கும் ஜகதீச னிருக்கிறார்!—அப்பா, நீ யார்? பாலனு யிருக்கிறாய். இங்கு வந்த தேது?

த. அப்படியே நீ பேசகி கொடுத்துக்குனே யிரு, இதுக்குள்ள நான் சாப்பிட்டு வர்ரேன். இல்லாப்போனா எம்பங்குக்குங் கூட வழி வைக்கும் இந்தக் கெழம.

[போய்த் தன் பங்கைச் சாப்பிடுகிறான.]

ரா. பெரியவரே, நான் ஒரு ராஜ குமாரன். ஒரு காரணம் பற்றி வேதாள உலகம் நாடிப் போகிறேன். இக்காட்டில் வந்து அல்லற்படுகிறேன். இதினின்றும வெளியே போக உமக்கு வழி யேதாவது தெரியுமா?

மா. அப்பா, குழந்தாய், நீ வேதாள உலகத்திற்கு ஏன் போகப் புறப்பட்டாய்?

த. [சாப்பிட்டுக்கொணடே] அங்கே ஒரு ஆமமா இருக்குராங் களாமே, அந்த அம்மாளெக் கட்டிக்கணுமாம்.

ரா. பெரியவரே, அதன்று. என் பிதாவை அங்கிருந்து மீட்டுக்கொண்டு வரவேண்டுமென்று போகிறேன்.

மா. மெய்யாகவா?

ரா. ஆம், மெய்.

த. [தின்றுகொண்டே] ஆவாம், பொய்யி

மா. குழந்தாய், உன குணத்தை மெச்சினேன் எனக்கு அந்த உலகத்திற்குப் போகும் மார்க்கந்தெரியும், சொல்லு கிறேன். [சுட்டி ஒரு புறங் காட்டி] அதோ மலை யொன்று தெரிகிறதே அங்கே போனவுடன் அடி வாரத்தில் குகையொன் றிருக்கிறது. அதனுள்ளே ஜாக்கிரதையாகப் போகவேண்டும். அங்கே போன வுடன் ஒருவித நித்திரை வந்துவிடும்; நிததிரை வருவது தெரிந்ததும், நான் ஒரு மந்திரம் சொல்லுகிறேன், அதை மும்முறை உசசரித்துவிட்டு, பிறகு நித்திரை செய்வை யாயின் வேதாள உலகம் போய்ச் சேர்வாய்.

ரா. ஐயனே, தேவரீர அந்த மநதிரததை அடியேனுக் குபதே சித தருளவேண்டும்.

மா. கேள். [காதில் மெல்லச சொலகிறார்.] ரா—ஜீ—வி. இதை ஒருவரிடமும கூறாதே.

த. [சாப்பிடுவதை முடிததுக்கொண்டு] ஏ, ஏ! எனக்குங்கூட, எனக்குங்கூட.

மா. நீதான் எனக்கு ஒரு கவளமும் கொடுக்கமாட்டே னென்றாயே.

த. ஏ, ஏ! இனிமேலைக்கு, எப்பவாவது, ரொம்ப சாப்பாடு ஆப்டா, அப்போ நீங்க வந்தைதக்கண்ணு—உங்களுக்கு கொஞ்சந் தர்ரேன்; இப்ப இல்லியே எங்கிட்ட.

மா. நான் சொல்லமாட்டேன் உனக்கு நீ அம் மந்திரத்தைத் தப்பாக உச்சரிப்பையாயின் உனக்குப் பெருங் கஷ்டம் நேரிடும்.

த. இல்லெ, இல்லெ, நான் சரியா சொல்லுவேன்.

மா. மாட்டேன்.

த. ராஜசிம்மா! என்னெ உட்டுட்டு நீ மாத்ரம் போரதோ?

ரா. ஐயனே, இவன் என் தோழன். இவன்மீதுங் கிருபை கூர்ந்து, என் பொருட்டாவது அம்மந்திரத்தை இவ னுக்கும் உபதேசித் தருளவேண்டும்.

மா. ஆனால் கேள். [தத்தன் காதில் மெல்லச் சொல்கிறார்.] ரா—ஜீ—வி—தெரியுமா? தப்பாகச சொல்லப் போகி றாய்? தப்பாகச சொன்னால் பிறகு கஷ்டம்.

த. இல்லெ, இல்லெ, எனக்குத் தெரியுமே, மூணு எழுத்து சா—பா—டு— இன்ற மாதிரியா.—தெரியும், தெரியும்.

மா. புறப்படுங்கள். சாயுங்காலமாகிறது. இருளுமுன் மலையடிவாரம போய்ச் சேருங்கள்.

ரா. சுவாமி விடைபெற்றுக் கொள்கிறேன். தங்கள் ஆசீர்வாதத்தால் சிறியேன மேற்கொண்ட காரியம் சித்தி பெறும்படி அனுக்கிரகிக்கவேண்டும.

மா. ஈசனருளால் உனக்கு எல்லாம் சித்தியாகும்; வயதிற் சிறியவனாயிருந்தும் புத்தியிற் பெரியவனானாய்! என்ன இடுக்கண் நேர்ந்த போதிலும் ஈசன் இருக்கிறாரென்பதையே ஞானோபதேசமாகக் கொள்வாய்.

ரா. குருமஹாராஜ, தமதுடைய உபதேசத்திற்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேனோ?

மா. அதைமறவாதிருந்தாலேயாம்; சுகமாய்ப் போய்வா, சீக்கிரம்.

## இரண்டாம் காட்சி

**இடம்—மலைக் குகை காலம்—மாலை.**

**ராஜசிம்ஹனும் தத்தனும் வருகிறார்கள்**

த. சரி, குருமஹாராஜா ஒபதேசம் இதுக்குள்ளே தலெக்கி ஏறிப்பூட்டாப்போல யிருக்குதே! பேச்சு கீச்சு எல்லாம் மாறிப் பூட்டுதே, அந்த ஒபதேசம் எனக்குங்கூட பண்ணிடப்பா.

ரா. தத்தா, அப்புறம் ஆகட்டும்; குகை யருகில் வந்துவிட்டோம். குருமஹாராஜ் சொன்னதெல்லாம் ஞாபக மிருக்கட்டும். போனவுடன் நமக்கு ஓர்வித நித்திரை வருமாம். அது வருமுன் அவர் உபதேசித்த மந்திரத்தை மூன்று முறை உச்சரிக்கவேண்டும்; தவறாக ஏதாவது சொல்லப் போகிறாய். மந்திரம் ஞாபக மிருக்கிறதே!

த. ஊம்! இதுக்குள்ளே மறந்து பூடுவேனோ? மூணு எழுத்து தானே?

ரா. சரி, போவோமா குகைக்குள்?

த. உம்—ஒவ்வொருத்தரா போறது நல்லதல்லா? நீ மின்னே போ, அப்புறம் வர்ரேன் நானு.

ரா. சரிதான், ஜாக்கிரதை. மந்திரம் ஞாபக மிருக்கட்டும்.

த. சர்தான் சர்தான். [ராஜசிம்ஹன் குகைக்குள் போகிறான்]

ரா. என்ன இருண்டிருக்கிறது—என்ன ஒருவாறு மயக்கமா யிருக்கிறது ! ஓ ! தூக்கம் வருகிறாற்போ லிருக்கிறது ! ராஜீவி, ராஜீவி, ராஜீவி. [மயங்கி விழுகிறான்.]

த. அடடே ! இதென்னது ? மந்திரம் மறந்துப் பூட்டானு என்ன ?—தூங்கரானு ? உள்ளே போயி பார்க்கலாமா நாம்பளும் ? [இடிபோன்ற சப்தம் ஒன்று கேட்டு] அடடே ! இதென்னது ? பாப்போம !

[குகை வெடித்துப் பிரகாசம் உண்டாகி அதில் மாத்திரைக்கோல் கையிலேந்திய ராஜீவி தோற்றுகிறாள். ]

ராஜீ "கன்னிகை யானே யாயின் காண்கில மற்றோ கண்கள
என்னுடை யிதயந் தன்னை பியமபினே னுறு மின்றே"
நூறாவது ஆசாமி வநதார இதகனை நாடகள் கழிகது ! எப்படி யிருக்கிறாரா, பாரப்போம. [சமீபித்து] ராஜகுமாரனை போல தோனறுகிறது—நலல யௌவ னம—சுந்தர குமாரன ! ஐயோ ! புவியிற் கிடைத்தற் கரிய வெழிலைப் படைத்த இவ வரசிளங் குமாரனது ஆருயிரை யழிப்பது தர்மமன்று ; நமக்கு நமது நூற்றுக் கணக்கை முடிப்பதறகு இவர் போனால் இன்னொருவன் வருகிறான். விளக்கிற்கு விட்டில்கள் தாமோ குறைவு ? பாபம் ! இவ் வழகிய அரச குமாரன் பிழைத்துப் போகட்டும். மெல்ல எழுப்பி வந்த வழி அனுப்பிவிடு வோம். என் முகத்தைக் காண்பாராயின மயங்கி மதன் வலைக்குட்படுவார். முகத்தை மூடி மூர்ச்சை தெளிவிப் போம். [முகத்தை மூடிக்கொண்டு]

"கன்னிகை யானே யாயின் காணவே கண்கள் தந்தேன்
என்னுடை யிதயந் தன்னை யியம்பினேன் காணு மின்றே"

(என்று மாத்திரைக் கோலைச் சுழற்ற ராஜசிம்ஹன் எழுந்திருக்கிறான் )

அரசகுமாரா, நீர் யார் ? ஒருவர் துணையுமின்றி இவ்வருங் கானக மடைந்த காரணமென்ன ?

ரா. மகேந்திரவர்மன அருந்தவத் துதித்த மங்கையர்க்கரசியே! நான் மச்சதேயத்து மன்னன் மைந்தன். உன் தந்தை யிடம் ஓர் வரம்வேண்டி மகேந்திர நகரம் நாடி இக் கானகம் வரையிலும் வழி யறிந்து வந்தேன். இதற்கப் பால் செல்ல வகை யறியாது திகைத்து நிற்க, ஓர் மஹா

னுபாவர் நேர்ப்பட்டு ஓர் மந்திரோபதேசம் செய்து, இந்த குகைக்குட் சென்று அதை உச்சரிப்பையாயின், நீ வேதாள உலகம செல்ல வழி உண்டாகும் என்று கூறிச சென்றார். அதன்படியே யிங்குவந்து மந்திரததை யுச்சரிக்க, மதி கலங்கி மூர்ச்சையானேன்; மயக்கம் நீங்கி கண்விழிக்க எதிர்ப்பட்டாய்நீ. இதுவே என விருததாந்தம்.

ராஜீ. நான் மகேந்திரவர்மன் புதலவியென்று எப்படித தெரியும்?

ரா. அரசிளங் குமரியே, உன் அழகிய உருவமைந்த சித்திரததை நான் பார்ததிருக்கிறேன்.

ராஜீ அதிருககட்டும்.—என தந்தையிடம என்ன ... நாடி வந்தீர் ?

ரா. பதினறு வருஷங்களுகது முன்பாக மகேந்திரம நோக்கிச சென்ற என பிதா இன்னும திரும்பிலா உன் தநதையிடமிருநது; அவர் கதி யென்ன வாயதோ என்று அறிந்து அவரை மீட்டுககொண்டு போக வந்தேன்.

ராஜீ. ஆ! அப்படியா ? இந்த ஒரு காரணந்தானே வேறு ஏதாவது காரணமுண்டோ தாம் மகேந்திரம் நாடி வந்ததறகு ?

ரா. இன்னொரு காரண முண்டு.—ஆனால் அதை உனனிடங கூற எனக்கிஷ்டமில்லை.

ராஜீ. ஓஹோ ! [நகைத்துக்கொண்டே.]
அதைத் தாம் கூறாமலே அறிந்துகொள்ள முடியாதோ ?

ரா. முடியாதென்று நினைக்கிறேன்.

ராஜீ. உண்மையில் ?

ரா. உண்மையில்.

ராஜீ. நான அக் காரணத்தைச் சொல்லவா ?

ரா. சொல், கேட்போம்.

ராஜீ. தாம் வந்ததற்குக் காரணம்—உமது தந்தை எந்தக் காரணம் பற்றி யிங்கு வந்தாரோ அந்தக் காரணமே!

ரா. நினைத்தேன்.—அன்று, அன்று, ராஜகுமாரி, நீ கூறியதன்று, உன்னால் கூற முடியாதென்று அப்பொழுதே சொன்னேனே ?

ராஜீ. அன்று ? உமது தந்தை மகேந்திரம் நாடிய காரணம் அறிவீரா நீர் ?

ரா. நன்றா யறிவேன்.

ராஜீ. அந்தக் காரணம் அல்ல என்கிறீர் ஆனல் ?

ரா. ஆம்.

ராஜீ. ஆம் ?—என் படத்தை நீா பார்த்திருக்கிறீரா ?

ரா. நன்றாய்ப் பார்ததிருக்கிறேன்.

ராஜீ. உம—சரி, உமது மற்றொரு காரணத்தைப்பற்றி பிறகு யோசிப்போம்.—உமது தந்தையை மீட்டுக்கொண்டு போக வந்ததாகக கூறினீரா, அவர் இப்பொழுது எக்கதியி லிருக்கிறார் தெரியுமா உமக்கு ?

ரா. உன தந்தை யிடட வேலையை நிறைவேற்ற முடியாது சபிக்கப்பட் டிருக்கவேண்டுமென்று நினைக்கிறேன்.

ராஜீ. ஆம், சிலையாகச சபிககப்பட் டிருக்கிறார்—ராஜகுமாரா, அவரை மறுபடியும் உயிர் பெறச செய்து மீட்டுக்கொண்டு போக உம்மா லாகுமோ ?

ரா. ஆனல பார்க்கிறேன்.

ராஜீ ஆகாவிட்டால ?

ரா. சாகிறேன்.

ரா. ராஜகுமாரா, இதென்ன பேதமை? நான சொலவதைக் கேளும. என் தந்தை மனத்தைத திர்ப்திசெய்து அவ ரிடம் வரம் பெறுவது எவருக்கும அசாததியமான காரி யம். உமது தந்தையா லாகாதது உம்மால் ஆகப்போ கிறதா ? வேண்டாம், இந்தப் பிரயத்னத்தை விட்டு விடும்; வீணில தாமும் உயிரிழப்பீா. உமது நகரம் திரும்பிப் போய்ச சேரும் நீர் சுகமாய்.

ரா. அது முடியாத காரியம.

ராஜீ. இது மாததிரம் முடியுங் காரியமோ ?

ரா. ராஜகுமாரி, உனனிடம் நான் தர்க்கிப்பது நியாயமன்று. என் தீர்மானத்தைக் கூறுகிறேன் கேள் நான என் தந்தை யுடனாவது திரும்பிப் போகவேண்டும், அல்லது அவர் சென்ற இடமாவது செல்லவேண்டும்.

ராஜீ. உயிரற்ற தந்தைக்காக உமதுயிரைக் கொடுப்பதோ ?

ரா. உயிர் கொடுத்த தந்தைக்காக உயிரிழததல நியாயமே.

ராஜ். அதில பிரயோஜன மிருந்தால் அப்படியே செய்யலாம், கொஞ்சமேனும் பிரயோஜன மில்லையே. நான் சொல்வதைக் கேளும்; உமது நன்மையைக் கோரியே நான் கூறுகிறேன்.

ரா. ராஜகுமாரி, நீ என் நன்மையைக் கோருவது உண்மை யாயின், என்னை உடனே மகேந்திரத்திற கழைததுச சென்று உன் தநதை முன் விடு. இந்த உபகாரம் எனக் குச் செய், போதும்.

ராஜ். சரி, உம திஷ்டம. பிறகு என்னைப் பழிககவேணடாம். வாரும எனனோடு. [அழைததுச செலகிறாள். குகை மூடிக்கொள்கிறது.]

த. அடடே! நாமபளும் கூட பூடாப் பூட்டமே! சுலபமா போயிருககுமே—சீககிரம போவோம. போயி மநதரதஇத சொன்னு நம்பளெயும வந்து அழெசசிககினு போவும் [குகையின் வாயில பிரவேசிக்கிறான்.]

பயமமா யிருககுதே! சீக்கிரம் அநத மந்தரதஇத சொல விடணும். இல்லாப் போனு—அடடே! தூககம் வருது. —சீக்ரம்—சீக்ரம்!—என்ன மந்தரம?—உம — தூ!— மூணெழுதது—அடடே! மறநதுப் பூட்டுதே—மூணெ ழுத்து.—சா—பா—டு—அலலாவே—பே—தா—ளம்!

[மயஙகி விழுகிறான. இடி முழக்கம போல சப்தம், குகை திறக்க, அதனுள ளிருந்து இரைசசலிட்டுக்கொண்டு, வேதாளங்கள் வருகின்றன.]

எல்லாம். [தததனைச சுறறிச சுற்றி] ஆப்டுக்கினே, ஆப்டுக்கினே!

த. [எழுந்து வேதாளஙகளுடன சோந்துகொண்டு] ஆப்டுக கினிஙகோ, ஆப்டுககினிஙகோ! [கூததாடுகிறான.]

வே—தலைவன். ஏ! என்ன, இவனும நமபளோட கூட ஆடரான்! நிலலுஙகடா கொஞ்சம.—அடே! ஆபடுககினதும் இல லாதே என்னு கூததாடரே எங்களோடே?

த ஏ! என்னு? நீங்கலலாம ஆப்டுக்கினதும இல்லாதே பேசுரிங்களா எனனோடே?

வே—த. வாயெப்பாரு!

த. மூஞ்செப்பாரு!

வே—த. அடே! என்ன, அதனப்ரிசங்கியா யிருக்கிறே! நம்ப சமாசாரந் தெரியுமா?

த. எஞ் சமாசாரஞ் தெரியுமா?

வே—த. என்ன உஞ் சமாசாரம்? நீ யாரு?

த. நீ யாரு?

வே—த. நான் பேதாள ராஜன் முதல் மந்திரி, என் பெயரு 'ஆள் முழுங்கி பேதாளம்' தெரியுமா?

த. எம் பெயரு 'பேதாள முழுங்கி ஆளு' தெரியுமா?

வே—த. டேயப்பா! எங்களை முழுங்கிடுவியோ? முழுங்கு பாக்கலாம், எதோ?

த. இதோ, ஒரு நிமிஷத்திலே! வர்சையா நில்லுங்க.—உம் பெயரென்ன?

வே. 1. குண்டா கரணன்

த. உம் பெரென்ன?

வே. 2. குளோபாகாரன்.

த. உம் பெயரெனன?

வே. 3. டமார பாபன்.

த. உம் பெயரென்ன?

வே. 4. டமரக கமபன்.

த. உம் பெயரென்ன?

வே. 5. மததாளவாயன்.

த. உம் பெயரென்ன?

வே. 6. மந்தர கிரியன்.

த. உம் பெயரென்ன?

வே. 7. டம்பர முக்கன்.

த. [வேதாளத் தலைவனை நோக்கி] ஏ! சுடுமூஞ்சன்! நீயும் போயி நில்லு. [அவன் அப்படியே செய்ய ததகன் எண்ணுகிறான்.]

பன்னெண்டு—அடடே! சீசசீசசீசசி! இன்னம் ஒண்ணு கொறையுது. தூத்தூ!

வே—த. என்ன அது? என்ன கொறயுது?

த. இதுவரெக்கும் நாஉ எண்பததேழு பேதாளங்களே திண்ணிருக்கிறேன். நீங்க பன்னெண்டாசசி! இன்னம் ஒண்ணு ஒணுமே நூறுவது—அதுவும்பெரிய ராஜ பேதாளமா யிருக்கணும்.

வே—த. ஏ! எங்களெ முழுங்கக் காணும், எங்க ராஜாவே முழுங்கிடுவியோ?

த. உங்க ராஜாவெ மாத்ரம் காட்டு அப்புறம் சொல்றேன்.

வே—த. எதோ பாக்கலாம், வா காட்றேன்.

த. ஊம்.—எங்கே?

வே—த. வா எங்களோட.

த. அதெல்லாம் ஒசவாது—நான் வரணும்ணு தூக்கிக்கினு போங்க என்னெ.

வே-த. சரிதான், வா. [தத்தனைத் தூக்கிக்கொண்டு குகைக்குள் போகின்றனர்.]

## மூன்றும் அங்கம் - முதற் காட்சி

இடம்.—நந்தவனம். காலம்—காலை.

ராஜீவி வருகிறாள்.

ராஜீ. தந்தை இன்னும் வந்திலரே யிங்கு! அவர் வந்தவுடன் நல்ல தருணம் பார்த்து ராஜ குமாரனைக் காணும்படிச் செய்யவேண்டும்.—மஹாராஜா என்ன அசாத்தியமான கட்டளையிடப் போகிறாரோ?—மஹாராஜா கட்டளையிடுவதாவது! எல்லாம் என் மாற்றாந்தாய் உபதேசந் தான். ஐயோ! இதுவரையிலும் வந்த மன்னருக் கெல்லாம் செயற்கரிய கட்டளை யிடுந்தோறும் சந்தோஷித்த என் மனம், இப்பொழுது இந்த ராஜ குமாரனுக்கு மாத்திரம் என்ன கடுமையான கட்டளையிடப் போகிறாரோ வென்று ஏங்குவானேன்?—என் மனத்தினிடமிருந்து நானே ஒளிப்பானேன்? இதுவரையிலும் எந்த அரசனாலும் வெல்லப்படாத கன்னி யென் மனம், மாரனை வென்ற இம் மன்னனைக் கண்டவுடனே அவர் பாதம் போய் அடைக்கலமெனப் புகுந்ததே! சீ!—என்ன சுந்தரன்! மதனனே இவ் வடிவுகொண்டு வந்தனனோ? சீ! நான் கன்னியேயானால் இக் காதலனையே நான் கணவனாகப் பெறவேண்டும்,—ஆயினும் ராஜகுமாரன் மனம் எப்படி யிருக்கிறதோ?—என்ன விந்தை!—சித்திரத்தில் என்னைக் கண்டவரெல்லாம் சித்தஜன் வசமாக, இந்த ராஜகுமாரன் ஒருவன் மாத்திரம் கண்ணெதிரிற் கண்டும் கலங்கா மனதுடையவனா யிருக்கிறார்!—முதலில் அவர்

கூறியது ஏதோ போக்கென்று நினைத்தேன். பிறகு நான் எத்தனையோ விதத்தால் பரிசோதித்துப் பார்த்தும் அவர் முதலில கூறியவண்ணமே தன் தந்தையை மீட்டுக் கொண்டு போவதற்கே வந்திருக்கிறாற்போல் தோற்று கிறது. இன்னும் வேறொரு காரணமு மிருப்பதாகக் கூறி ஞர், அது என்ன காரணமா யிருக்கலாம? நான் எண் ணிய காரணமன்று என்று உறுதியாய்க் கூறினர்; அதிற் சந்தேகமில்லை.—ஆயினும் பார்ப்போம். இந்த ராஜகுமா ரன மனத்தைக் கலைத்து என்மீதுகாதல் கொள்ளும்படிச் செய்ய என்னுடைய திறமையில்லாமற் போயிற்றே. பார்ப் போம; முதலில மஹாராஜாவால சபிக்கப்படாதபடி பார்த்துக் கொள்ளவேண்டும்.

மோகனவல்லி வருகிருள்

மோ. அக்கா! அக்கா!

ராஜ். யார் அது?

மோ. புதிதாய் ஒரு ராஜகுமாரன் வந்திருக்கிறாரே, பார்த்தாயா?

ராஜீ. எங்கே?

மோ. அதோ அந்தக் கதலிக் கிருஹத் தருகிலுள்ள பாரிஜாத விருட்சத்தின் கீழ் படுத்திருக்கிருர், வரும்பொழுது பார்த்தேன. எவ்வளவு அழகிய ராஜகுமாரன்! என்ன சுந்தர புருஷன்—அக்கா, நீ அவரைக் கலியாணம் செய்து கொள்ள மாட்டாயல்ல?

ராஜீ. ஏன் கேட்கிறாய்?

மோ. இல்லை, நான் கலியாணம் செய்துகொள்ள வேண்டும், அதற்காகக் கேட்டேன். அவர்தான் எனக்குத் தக்க புருஷன்; முகத்தி னழகைப் பார்த்தனையா? புருவம் வளைந்திருப்பதை நோக்கினையா? அதரம் என்ன சிவந்த கோவைக் கனியைப்போ லிருக்கிறது—அப்படியே—

ராஜீ. அதிருக்கட்டும்:—அம்மா எங்கே?

மோ. அம்மாளைத் தேடித்தான் நானும் வந்தேன். அவர்களிடஞ் சொல்லி இந்த ராஜகுமாரனுக்கே என்னைக் கலியாணம் செய்து கொடுக்கும்படி கேட்கவேண்டும் முன்பு; இல்லா விட்டால் இவனைச் சபித்துவிடுவார்கள்,

ராஜீ. ஆம், ஆம். போ முன்பு [மோகனவல்லி போகிறாள்.]
ஐயோ! இதென்ன கஷ்டத்தின்மீது கஷ்டமாய் வருகிறது. முன்பே என் மாற்றாந் தாய்க்கு என்னிடம் பிரீதி அதிகம், இப்பொழுது தன் பெண்ணுக்கு அந்த ராஜகுமாரனை மணம் புரிய வேண்டுமெனனும் எண்ணமும் உண்டாய் விட்டால் எனது கோரிக்கை நிறைவேறினாற்போல்தான்! எது இல்லாவிட்டாலும் மோகனவல்லிக்குப் பிடிவாதம் ஒன்றிருக்கிறது. நான் என்ன செய்யப்போகிறேன்? அகதிகட்கு ஆகாயமே துணை! தெய்வமிருக்கிறது பார்த்துக் கொள்வோம். ஆயினும் இதில ஒரு அனுகூலமிருக்கிறது. மோகனவல்லிக்கு இநத எண்ண மிருக்குமளவும ராஜகுமாரனுக்கு ஒரு குறையும் செய்யமாட்டாள் என மாற்றாந்தாய்.--இந்த சந்தர்ப்பத்தில நான ராஜகுமாரனை மஹாராஜாவிடம அழைத்துச செலல லாகாது, அவரே பார்க்கச் செய்யவேண்டும். மஹாராஜா வரும் சமயமாய் விட்டது--ராஜகுமாரனை அழைப்போம்.
[கையைத் தட்டுகிறாள்.]

ராஜசிம்ஹன் வருகிறான்.

ரா. வந்தனரோ உன் தந்தை?

ராஜீ. இல்லை, வரும் நேரம் ஆயிற்று--எனக்குக் கொஞ்சம் வேலை யிருக்கிறது, நான் போகவேண்டும். நீரே மஹாராஜாவை நேரிற் காணும்--நான் கூறியது மாத்திரம் ஞாபக மிருக்கட்டும். என்ன நேர்ந்தபோதிலும் மஹாராணியைப் பகைத்துக் கொள்ளாதீர். எல்லாம் அவர் கவாற்றா னிருக்கிறது.

ரா. அப்படியே ஆகட்டும்.

ராஜீ. ராஜகுமாரா, என்னிடங் கூறேனென்ற மற்றொரு காரணத்தை அறிந்து கொண்டேனே நான்.

ரா. என்ன அது?

ராஜீ. என் தங்கையை--மணம்புரியும் பொருட்டு.

ரா. யார் உனது தங்கை?

ராஜீ. சற்று முனபாக உம்மை அங்கே பார்க்கவில்லையா?

ரா. ராஜகுமாரி, என்னை ஏளனஞ் செங்கிறாயா என்ன? நானாவது அப்பெண்ணை மணம் புரிவதாவது?

ராஜீ. ஏன் ?

ரா. உன மனத்தையே கேட்டுப் பார் நீ.

ராஜீ. உம், மஹாராஜா வருகிறார். [வேகமாய்ப் போகிறாள்]

**வீரமார்த்தாண்டனும், கோமதியும், மோகனவல்லியும், வேதாளங்கள புடைசூழ வருகிறார்கள்**

ரா. ராஜாதி ராஜனே ! நமஸ்காரம்.

வீ யார் அது ?

ரா. அடியேன் மச்ச தேசத் தரச குமாரன்.

வீ. இங்கு வந்த காரண மென்ன ?

ரா. தங்களை யடைந்தவர்களுக்குவேண்டிய வரத்தைக்கொடுக்கும் தயாபரன் என்று தமது புகழ் தரணி யெங்கும் பரவி யிருக்கிறது. அதைக் கேள்வியுற்று, ஓர் வரம் நாடித் தமியே னடைந்தேன் சன்னிதானத்தை.

வீ. அப்பா, என்னிடம் வரம் வேண்டுவோர்கள் செய்ய வேண்டியது என்ன தென்று அறிந்திருக்கின்றனையா ?

ரா. அறிந்திருக்கிறேன்—தாங்களிடும் மூன்று கட்டளைகளை நிறைவேற்ற வேண்டும்.

வீ. அவைகளை நிறைவேற்றச் சகதி யுண்டோ உன்னிடம ?

ரா. முயன்று பார்க்கிறேன்.

வீ. முடியாமற் போனுல் ?

ரா. மடிந்து போகிறேன்.

வீ. ஒரு பெண் பொருட்டு !

ரா. அன்று, என் தந்தையின் பொருட்டு !

வீ. என்ன ! உன் தந்தையின் பொருட்டா ?

ரா. ஆம், நான் நாடிவந்தது என் தந்தையின் ஆருயிரே.

வீ. சத்தியமாக? என்னை ஏறெடுத்துப் பார்த்துச் சொல்.

ரா. ஆம், சத்தியமாக; உம்மால் சபிக்கப்பட்டிருக்கும் என் தந்தையை மீட்டுக்கொண்டு போகவே வந்திருக்கிறேன்.

வீ. அப்பா, நீயோ அதி பால்யனு யிருக்கிறாய். உன் தந்தையாலும், தந்தையைவிட வீராதிவீரர்களாலும் செய்து முடித்தற்கரிய எனது கட்டளைகளை நீயோ நிறைவேற்றி என்னிடம் வேண்டிய வரத்தைப் பெறப் போகிறாய் ? நான் சொல்வதைக்கேள். இந்த வீண் பிரயோஜனத்தில்

உயிரை விடாது உன் நகரம் போய்ச் சேர். உன் தந்தையின் தலைவிதியின்படி நடந்தது; அதைத் தவிர்க்க உன்னாலாகுமோ?

ரா. இந்த வீண் பிரயத்னத்தில் என்னுயிரைப் போக்க வேண்டுமென்று என் தலைவிதி யிருந்தால் அதைத் தவிர்க்க யாரா லாகும்?

வீ. நான் தவிர்க்கிறேன்.

ரா. அங்ஙனமே நாம் தயைகூர்ந்து என் தந்தையின் தலைவிதியையுந் தவிர்க்கவேண்டும்.

வீ. [நகைத்து] உம்!

கோ. பிராணநாதா, ஐயோ பாபம்! முயன்றுதான் பார்க்கட்டுமே, ஏன் தடை செய்கிறீர்? இந்த ராஜகுமாரன் செய்து முடிப்பானென்று ஏதோ தோற்றுகிறது.

வீ. செய்து முடிப்பதாயின் எனக்கும் சந்தோஷந்தான். ஆனால் அதுதான் அசாத்தியம்.

கோ. இவ்வளவு கூறும்போது ஏதோ பார்ப்போம்.

வீ. சரி, உன்னிஷ்டம். [உள்ளே பேரிரைச்சல்]
என்ன பேரிரைச்சல் அது?

தத்தனைத் தூக்கியவண்ணம் வேதாளங்கள் இரைந்துகொண்டு வருகின்றன

த. மெள்ள, மெள்ள!
ஆ! [வேதாளங்கள் தத்தனை இறக்குகின்றன.]

வீ. இதென்ன விந்தையா யிருக்கிறது! ஒரு நர மனுஷனை எனது வேதாளங்கள் தூக்கிக்கொண்டு வந்துவிட்டனவே என் முன்னிலையில்!— [தத்தனை நோக்கி]
யாரடா நீ?

த. [வேதாளங்களை நோக்கி] யாரடா நானு? சொல்லுங்கோ.

வே—த. மஹாராஜா! இவரு, பேதாளம் முழுங்கி ஆளாம்.

வீ. என்ன? வேதாளம் முழுங்கி ஆள்!—எனக்கே சிரிப்பு வருகிறது. [நகைக்கிறான்.]

த. எனக்குங் கூட ரொம்ப சிரிப்பு வருது.

வீ. என்ன அதிகப் பிரசங்கியா யிருக்கிறாய்?

த. ரொம்ப சரி! எங்க வாத்தியாருகூட அதே பேரு வைச்சாரு எனக்கு, அது உங்களுக்கு என்னமா தெரிஞ்சுது?

வி. மூடு வாயை, ஏனிங்கு வந்தாய் நீ ?

த. ஏ ! நல்ல மஹாராஜாவா யிருக்கிறீகளே ? வாயெ மூடிக்கினு எப்படி பதிலு சொல்றது நானு ?

வி. இங்கு ஏன் வந்தாய்? உடனே சொல்லுகிறாயா, உன்னைச் சபிக்கவா ?

த. கொஞ்சங் கோவிச்சிக்காதிங்கோ. நான் சொல்லாத்தெ கொஞ்சங் கேட்டுட்டு அப்புறம் ஒண்ணுமண்ணு சபிச்சுடுங்கோ. நானு இங்கே வந்தேனா? உங்க பேதாளங்க என்னெ தூக்கிக்கினு வந்தாதுங்க, ஏண்டா இவனெ தூக்கிக்கினு வந்திங்கோ இண்ணு அதுங்களெ கேக்காதே, என்னெ கேக்கிறது நாயமா ?

வி. கழுதைகளே ! இவனை யேன் தூக்கிக்கொண்டு வந்தீர்கள் என் முன்பாக ?

த. அப்படி கேளுங்க, அதத்தெ உட்டுட்டு—

வே—த. எங்க மேலே தப்பில்லே, மஹாராஜா இவர் பேரு பேதாளம் முழுங்கி ஆளு இண்ணுரு, ஆளு முழுங்கு பாக்கலாம் இண்ணோம். உங்க மஹாராஜா கிட்ட இட்டுக்கினு போனா காட்டரேண்ணுரு—

வி. ஏனடா? அவன் ஏதோ பிதற்றினால அதை நம்பி என் முன்பாகத் தூக்கிக்கொண்டா வருகிறீர்கள்? போங்கள் என் முன் நில்லாதீர்கள் !

வே. [தத்தனைப் பார்த்து] ஆவுட்டும், ஆவுட்டும் [போகின்றன]

த. மின்னே போவட்டும், அப்றம் ஆவுட்டும்.

வி. என்ன அதிகமாய்ப் பேசுகிறாய்? உன் உடல் முழுதும் இந்த க்ஷணம் கல்லாய்ப் போகும்படி சபிக்கப் போகிறேன், என்ன சொல்லுகிறாய் ?

த. நான் என்னா சொல்றது? அது உங்களாலே முடியாதிண்ணு சொல்லப்பேறேன், அவ்வளவுதான்.

வி. ஏன் முடியாது ?

த. என் ஒடம்பெ எதத்தெ ஒண்ணும் மிண்ணும் கல்லாக்கலாம், என் தலெயெ மாத்தரம் கல்லாக்க முடியாது.

வி. ஏன் ?

த. அது நான் பொறந்தது மொதலு கல்லாயிருக்கு திண்ணு ஙங்க வாத்யாரு சொல்லி யிருக்கிறாரெ, அத்தெ கல்லா நீங்க ஆக்றது என்ன?

ரா. மஹாராஜா, இவன் மீது கோபங்கொள்ள லாகாது. இவன் புத்தி அவ்வளவுதான்,

த. ஏ, ஏ! உம் புத்திக்கானு கொறஞ்சிப் போச்சோ? நீ நடந்து வந்தே யிங்கே, நானு பேதாளங்கமேலே சவாரி பண்ணிக்கினு வந்தேனே!

வி. சரி உனக்குத் தக்க தண்டனை விதிக்கவேண்டும். உனக்கும் மூன்று கட்டளைகளை யிடப் போகிறேன். அவைகளைச் செய்தாலாயிற்று, இல்லாவிடின உனக்குச் சாபங் கொடுப்பேன்.

த. அத்தெ செய்து முடிச்சாக்கா?

வி. முடித்தால் உனக்கு வேண்டிய வரத்தைக் கொடுப்பேன்.

த. சரி, அதான் எனக்கு ஒரு சந்தேகமா யிருக்குது.

வி. என்ன?

த. எனக்கென்னமோ நீங்க இடற கட்டளெயெ முடிச்சுடுரதுக்கு சக்தி யிருக்குதிண்ணு தெரியும். ஆனா நாங் கேக்ர வாத்தே குடுக்க உங்களுக்கு சக்தி யிருக்குமோ யில்லையோ, இண்ணு சந்தேகமா யிருக்குது. அதுக்கென்ன செய்றது?

வி. வாயிருக்கிறது உனக்கு!

த. அதாம் பொழச்சி யிருக்றேன்!

வி. எல்லாம் பார்க்கலாம், நாளை காலை உதயமாகி ஐந்து நாழிகைக்கு வாருங்கள்—ராஜகுமாரா, உனக்கும் இவனுக்கும் நாளைகாலை முதல் கட்டளையிடப் போகிறேன். சூரியன் உதித்து சரியாக ஐந்து நாழிகைக்குத் தவறாது காணவேண்டும் என்னை, போங்கள்.

கோ. ராஜகுமாரா, நீ புத்திசாலியா யிருந்தால் கட்டளையை நிறைவேற்றும் மார்க்கத்தைச் சுலபமாய் அறியலாம்—என்ன சொல்லுகிறாய், மோகனவல்லி?

மோ. ஆமாம். [தத்தன் ராஜசிம்ஹன் தவிர மற்றவர்கள் போகிறார்கள்.]

ரா. தத்தா, நீயேன் வந்து இங்கு அகப்படடுக் கொண்டாய்?

த. நீயேன வந்து இங்கே ஆப்டுக்கினே?

ரா. என் தந்தையின் பொருட்டு நான செய்யவேண்டிய கடமையிது.

த. என் சினேகிதன் பொருட்டு நாஞ் செய்யவேண்டிய கடமெ யிது.

ரா. சரி, வா நம்முடைய விதியை நாளை பார்ப்போம.

த. சரி, வா நம்போ சாப்பாட்டெ இப்போ பார்ப்போம.

[இருவரும் போகிறார்கள்.]

மறுபடியும் ராஜீவி வருகிறாள.

ராஜீ. சரி, நான நினைதத வண்ணமே முடிந்தது! மெலலெ மோகனவலலியைக் கொண்டே நமது காரியததை முடிக்க வேண்டும். [விரைந்து போகிறாள்.]

காட்சி முடிகிறது.

---

## இரண்டாவது காட்சி

இடம—இடையில கிணறென்றுள்ள தோட்டம. காலம—காலை.

ராஜசிம்ஹனும், தத்தனும் வருகிறார்கள்.

த. நானு ஒண்ணு யோசிச்சிப் பாததேன—நண்ணாதான இருக்குது இங்கே சாப்பாடு; இருந்தாலும நமப அரமனெயிலே நமப அம்மா போடுவாங்களே அந்த மாதிரி யிலலேண்ணு, அதேன் அப்படி?

ரா. அன்னையிடும் உணவின் ருசியாகாது உலகினில மறறெதுவும். அதிருக்கட்டும—நான வந்தகாரியங் கைகூடு மென்று நினைக்கிறாயா?

த. இன்னாங் கை கூடுறதெனனு? நீ வந்த காாயந்தான் அப்பவே தீர்ந்துதே; இனிமே நீ ராஜகுமாரியெ உட்டுட்டாலும ராஜகுமாரி உன்னே உடமாட்டாப்போலே இருக்குதே!

ரா. அதலல, தத்தா, நான் சொல்ல வந்தது, இநத மூன்று கண்டங்களுந் தப்பி என் பிதாவை உயிர்ப்பிததுக்கொண்டு ஏகுவோமா நாம் நமது நகர்க்கு?

த. இதுவா? இது எனக்குத் தெரியாது. உங்குரு ஓர்த்தர் வந்தாரே, அவரு ஒபதேசம் பண்ணது மொதலு ஆம்

ஊம் இண்ணு, அல்லாத்துக்கும் சாமி யிருக்கிறு ரிண் ணிக்கினு இருப்பியே, அநத சாமியெ கேட்டுப் பாரேன் ?

ரா. ஆம், அவரைததான் நம்பி யிருக்கிறேன் நான்.

த. நான் என்னமோ என்னெத்தான் நம்பிக்கினிருக்கிறேன், அதிருக்கட்டும்—இந்த ராஜா இங்கே வர்ரேணுரே, ஏன் இன்னம் வரலே ? ஓஹோ ! அதோ வாராங்க எலலாம.

வேதாளஙகள் சூழ வீரமாாத்தாண்டனும் கோமதியும மோகனவலலியும வருகிறாாகள. ராஜீவி வந்து மறைந்து பாாக்கிருள.

வீ. ராஜகுமாரா, உனக்குக் கடைசி முறை சொலலுகிறேன். இப்பொழுதாவது என் வாாத்தையைக் கேள் எனது கட்டளைகளை நிறைவேறற எவராலு மாகாது. ஆகவே இப் பிரயத்னததை விட்டுவிடடு உன் நகர் போய்ச சேர. விருப்பமாயின உத்தரவு கேள் தருகிறேன் ; கடடளை யிட்டபின் உனனுல் அதனை நிறைவேற்ற முடியாவிட் டால் பிறகு உனக்கு அந்த உததர வளிக்க என்னுல ஏலாது எப்படியும் உன்னைச சபிததே தீரவேணடும் நான். ஏன் வீணில், இந்த யௌவனததில அழிகிருய் ?

ரா. மஹாராஜா அது என இஷ்டம்.

வீ. உன் இஷ்டமா ? ஆனுல் உன் கதி ! இதோ இதில் வரைந் திருக்கிறது எனது முதற் கட்டளை. இனறைததினம சூரியன் அஸ்தமிக்குமுன் முடிததுவிட வேண்டும்.

[ராஜசிம்ஹனிடம் கொடுக்கிருர்.]

த. ஏண்டா கெட்டுப்போவே இணுனும், உனகெனு நாஹு போடடி போட்டுக்கினு—

வீ. ஸ ! பேசாதே ! உன் கட்டளை யிதில் எழுதி யிருக்கிறது.

த. ரொம்ப சநதோஷம், கொடுங்க இப்படி. [வாஙகிப்பாாத்து] எந்தப் பக்கம் எழுதி யிருக்குது ?

வீ. இந்தப் புறம்.

த. ஓஹோ ! இத்தெ படிக்கத் தெரியாப்போனு எனக்கு—

வீ. ஸ் ! வாயை மூடு. உனக் கிட்ட கட்டளையை சாயுங் காலத்திற்குமுன் பூர்த்தி செய்யாவிட்டால், உன்னைப் பசித்திருக்கும் என் வேதாளங்களுக்கு இரையாகக் கொடுப்பேன். [வேதாளங்கள் கொக்கரிக்கின்றன.]

த. என்ன ராகம் இது? மஹாராஜா, இப்பவே கொல்லீடுரேன் நானு. நீங்க இட்ட வேலெயெ செய்ய நானு ஆரம்பிச்சா, இந்தப் பாடகருங்கெல்லாம் இப்படிப்பாட ஆரம்பிப்பாங்க போலெ யிருக்குது. அப்புறம் இந்தப் பாடடெக் கேட்டுக் சொக்கிப் பூடுவேன், வேலெ நடக்காரு; அததொட்டு இவங்களே யெல்லாம் இந்த மாதிரி கூச்சலிடக்கூடாது, நான் சொல்றபடி கேக்கனும் இண்ணு உத்தரவு பண்ணிங்க இப்பவே.

வீ. இது நியாயந்தான் அடா, வேதாளங்களே! இவன் வார்த்தைக்குக் குறுக்கே நீங்கள் ஒன்றுஞ் சொல்லலாகாது, சொல்வீர்களாயின் உங்களைத் தண்டிப்பேன்.

வே. இல்லே, மஹாராஜா, இல்லே.

த. சரி, இப்போ நீங்க போங்க, நான் கூப்பிடறபோது வாங்க! போங்க! [வேதாளங்கள் போகின்றன.]

வீ கோமடி, வா நாமும் போவோம்.—ராஜகுமாரா, நான் அப்பொழுதே சொன்னேனே கேட்டனையா? இப்பொழுது யோசித்து என்ன பலன்?

கோ. [ராஜசிம்ஹனை] ராஜகுமாரா, அதைரியப்படாதே, கைப்பற்றினல் மோகனவல்லியைக் கடைத்தேறும் வழியறியலாம்.—மோகனவல்லி வா, உனக்கொரு சமாசாரம் சொல்லவேண்டும்.

[ராஜசிம்ஹன் தத்தன் நீங்க மற்ற மூவரும் போகிருர்கள்.]

த. மொதல் வேலெ முடிஞ்சிப் போச்சி என் வரைக்கும்! உனக்கென்ன வேலெயிட்டிருக்கிருங்க, சொல்லு.

ரா. உன் வேலை எப்படி முடிந்தது? அதென்ன அவ்வளவு சுலபமான வேலை?

த. நீதான் படி.

ரா. [வாங்கி வாசிக்கிருன்] "சாயுங்காலத்திற்குள் எனது சதுரக் களஞ்சியத்திலுள்ள உணவெல்லாம் சாப்பிட்டாகவேண்டும்"—என்ன முடிந்ததென்ருய்? இதென்ன எளிதா? சதுரக் களஞ்சியம் எது தெரியுமா? நாம் நேற்றிரவு பார்த்தோமே அது. அதிலுள்ள உணவைப் புசிக்க ஒரு வருஷமாகும் உனக்கும்! உன் கதியும் என்கதிதான்!

த. எங்கதி ஒங்கதியாணு எனக்கு ரொம்ப சந்தோஷமாச்சே, அரெ நாழியிலே இந்த வேலே முடிச்சுக்கிறேன் பாரு!

ரா. எப்படி?

த. அதெல்லாம் உனக்குச் சொல்லக்கூடாது இப்போ.—உனக்கென்ன வேலே, சொல்லு பார்க்கலாம்?

ரா. [வாசிக்கிருன்] 'இங்கிருக்கும் தொட்டியால் இக் கிணற்றுத் தண்ணீரை யெல்லாம் வற்றச் செய்யவேண்டும்.'

த. அடடே! இவ்வளவுதாணு? இதுக்கா மூஞ்சியெ இப்படி வைச்சிக்கினிருக்றே? இதோ கொஞ்சம் பொறு. அரெ நாழியிலெ என் வேலெயெ முடிச்சிக்கினு வந்து அந்தத் தண்ணியெ யெல்லாம் பரபரண்ணு ஏறெசூட்றேன் ஒரு சொட்டு கூட இல்லாதெ!

ரா. தத்தா, இந்தத் தொட்டியைப் பார்.

த. என்ணு அதுக்கு? ஓட்டையாயிருக்குதா என்ணு?

[தொட்டியில கையைவிட்டுப் பார்க்கிருன்.]

அடடே! அடியே காணுமே! ஒரு சொட்டு தண்ணிகூட வர்ரத்துக்கு வழியெ காணுமே! பாத்தியா இந்த மோசத்தே! இதுக்கு என்ன செய்ரது?

ரா. தத்தா, உனக் கொரு கட்டளை யிடுகிறேன், அதன்படி செய்கிருயா?

த. ஏ! இந்த ராஜா இட்ட கட்டளெ போதாது இண்ணு நீ ஒண்ணு இடணுமா? சொல்லு பாக்கலாம். பொழச்சி யிருந்தா செய்ரேன்.

ரா. நீ இந்த மாயாவிகளிடமிருந்து தப்பிப் பிழைப்பையாயின், என் தாயாருக்கு நான் மடிந்த விதத்தை யுரைக்கவேண்டும் உண்மையாய். இல்லாவிடின் அவர்கள் ஏதாவது தவருக எண்ணுவார்கள். செய்கிருயா?

த. முடியாது என்ணுலே.

ரா. தத்தா, முன்பு செய்வதாக வாக்களித்தாயே?

த. ஏ! நானு என்ணு சொன்னேன்?—பொழச்சி யிருந்தாக்கா செய்ரேன் இண்ணேன்.

ரா. ஆம், நீ தப்பிப் பிழைத்தால்தான் இதைச் செய்யும்படி கேட்கிறேன்.

த. அத்தேதான் நானுஞ் சொல்ரேன். நீ பூட்டா நான் எப்படி பொழெச்சி யிருப்பேன்? ஒண்ணும்ணு ஒண்ணு செய்ரேன். நானு சாவரத்துக்கு முன்னே அந்த ராஜாத்தியம்மா புண்யவதி யிருக்ருங்களெ, அவங்களெ கொண்ணூட்டு சாவரென் நானு. அந்த புண்யவதிதான இந்த யுக்தி பண்ணுப்போலெ தோணுது எனக்கு.

ரா. தத்தா, தத்தா!— [பெருமூசசெறிகிருன்.]

த. நான் சொல்ரத்தெ கேளு இதுலெயெல்லாம் பிரயோஜனமில்லே உன் யுக்தியெ உனக்கே சொல்லித் தர்ரேன் எல்லாத்துக்கும் சாமி யிருக்கிருரு, சாமி யிருக்கிருரு இண்ணுவியே, அந்த சாமியெ குறிசசி பொராத்தனெ பண்ணு. அவ்வளவுதான்

ரா. ஆம், ஆம், இதுவரையில் அவரை மறந்திருந்தேன் பார்த்தனையா! நீ போ உன் வேலைக்கு, நான் பிரார்த்தனை செய்ய வேண்டும் உனக்கும், எனக்கும்.

த. எனக்கு நான் இருக்கறேன், உனக்கு நீ பார்த்துக்கோ, வரட்டுமா?

ரா. சுகமாய்ப் போய் வா.

த. கடெசியிலே நான் இருக்கிறேன்பயப்படாதே [போகிருன்]

ரா. [கண்களை மூடிப் பிரார்த்திக்கிருன்] ஈசனே! என்னை ஈன்ருேர் பொருட்டு இக்கஷ்டத்திற்கு உடன்பட்டேன். இக் கதியில் என்னை கைகொடுத்துக் காக்க வேண்டும்.

[ராஜீவி வந்து கைகொடுத்தெழுப்புகிருள்.]

ஆ! ராஜகுமாரி!

ராஜீ. ராஜகுமாரா, வேயுறு தோளிபங்கன் வெறுக்கான் உமது வேண்டுகோளை வெந்துயர்ப்படாதீர்.

ரா. அரசகுமாரியே, அரசன் ஆக்ஞையை அறிவையா?

ராஜீ. அறிவேன் அனைத்தும். ஆயினுந் தாம் அதைரியப்பட வேண்டியதில்லையென எண்ணுகிறேன்.

ரா. இதை முடிக்கும் மார்க்கம் உண்டோ ஏதேனும்?

ராஜீ. அதை உமக்குக் கூறிஞல் எனக்கென்ன தருவீர்?

ரா. ஒன்று தவிர எது வேண்டினுந் தருவேன்.

ராஜீ. அவ்வொன்றை வேண்டிலோ?

ரா. ஒன்றுடன் போய்ச் சேருவேன.

ராஜீ. அது ஏன் அப்படி ?

ரா. என் தலைவிதி இப்படி.

ராஜீ. சரி, இப்பொழுது காலதாமத மாகிறது. இத் தொழிலை முடிக்கும் சூழ்ச்சி என் தங்கை யறிவாள் என நம்புகிறேன். அவளிடமிருந்து எங்ஙனமாவது அறியவேண்டும். அதற்கொரு சுலபமான மார்க்கமுண்டு. இஷ்டமிருக்கின் ஏற்றுக் கொள்ளலாம்.

ரா. என்ன அது ?

ராஜீ. சீக்கிரம் உம்மிடம் வந்து கூறுவாளதை, தனனை மணந்து கொள்ள நீர் வாக்களிப்பீராயின் தான்அதைசசொல்வதாக

ரா. உம் !—அது தவிர.

ராஜீ. ஏன் அங்ஙனம் ?

ரா. நீயா கேட்பது இங்ஙனம் !

ராஜீ மோகனவல்லி விரைவில் வருவாள். நான் ஒரு யுக்தி சொல்கிறேன் கேளும் அவள் வந்து நான் கூறிய வண்ணம் எப்படியுங் கேட்பா ளும்மை அப்பொழுது உமது தோழன் தத்தன் தப்பிப் பிழைத்தா லொழிய தாம் மாத்திரம் பிழைப்பது பிரயோஜன மில்லையென்றும், அவனைத் தப்புவிக்கும் மார்க்கம் என் தந்தையிட மிருந்தறிந்த எனக்குத்தான் தெரியுமென்றும், அதை யெப்படியும் என்னிடமிருந்து அறிந்து வரவேண்டு மென்றும் சொல்லி, என்னிடம் எப்படியாவ தனுப்பும். பிறகு நடக்கவேண்டிய வேலையை நான் பார்த்துக்கொள்ளுகிறேன்.—ஜாக்கிரதை ! [வேகமாய் போகிறுள்.]

மற்றொருபுறமாய் மோகனவல்லி வருகிருள்.

மோ. ராஜகுமாரா, ராஜகுமார,—என்ன பேசாம லிருக்கிறீர்?—ஏன் ஒருவாறு இருக்கிறீர் ?

ரா. இறக்கப் போகிறவன் ஒருவாறு யிராது, இருவாறு யிருக்க வேண்டுமா ?

மோ. தாம் இறக்க வேண்டியதே யில்லை, நான் சொல்லுகிற படி மாத்திர கேட்டால்.

ரா. என்ன உன் சொற்படி கேட்பது ?

மோ. என்னை—விவாகஞ் செய்து கொள்வதானால் இந்த ஆபத்தினின்றுந் தப்பும் மார்க்கம் சொல்லுகிறேன்.

ரா. அது உனக்குத் தெரியுமா ?

மோ. தெரியும்.

ரா. இது மாத்திரந் தெரிந்தால் என்ன பிரயோஜனம் ?

மோ. ஏன் ?

ரா. தத்தனையும் தப்புவிக்கும் மார்க்கம் தெரியுமா உனக்கு ?

மோ. தெரியாது.

ரா. ஆனால் என்னை மாத்திரம் தப்பவைத் தென்ன பிரயோஜனம் ? அவன் இறந்தால நான் உயிர் தரிப்பேனென்று நினைக்கின்றனையா ?

மோ. ஐயோ ! அதை அம்மாளிடமிருந்து அரிய வில்லையே நான்.

ரா. அது உன் தாயாருக்குத் தெரியாது. உன் தமக்கை யொருத்திக்குததான் தெரியுமாம்.

மோ. ஆனால் அரை க்ஷணத்தில் அவளிடமிருந்து அதை அறிந்து வருகிறேன் நீர் மாத்திரம்.—

ரா. முன்பு தெரிந்துகொண்டு வா அப்புறம் மற்ற சமாசாரங்களெல்லாம் பேசுவோம்.

மோ. நான் சொன்னது ஞாபகமிருகட்டும்.

ரா. நான் சொன்னது ஞாபக மிருக்கட்டும். [போகிறாள்.]

**அடக்கமுடியாத நகைப்புடன் தத்தன் வருகிறான்.**

த. [நகைத்துக்கொண்டு] அம்மாடி ! [நகைக்கிறான்.] கொஞ்சஞ்சிரிசுட்டு வர்ரேன் இருண்ணு ! [நகைக்கிறான்.] அடக்க முடியலே என்னாலே ! [நகைக்கிறான்.]

ரா. என்ன விசேஷம் தததா ?

த. அதான் சொல்ரேன். [நகைக்கிறான்.] இதுக்குள்ள சிரிப்பு வருது—[நகைக்கிறான்.] இங்கே யிருந்து போனேனு—[நகைக்கிறான்.[—பொறு.—அப்றம், எல்லா பேதாளங்ளெயும் கூப்டு—[நகைக்கிறான்.] அப்பா ! பொறுக்க முடியலெ சிரிப்பு !—[நகைக்கிறான்.] ராஜா என்னெ இந்த சதரக் களஞ்சியத்தெ மாத்தரம்—தூக்கச் சொன்னாரு—[நகைக்கிறான்.] அத்தொட்டு அதுலெ யிருக்க சாப்பாட்டெ யெல்லாம் [நகைக்கிறான்.] காலிபண்ணிடம்னு

சொல்லி அங்கே யிருந்த சாப்பாட்டெ யெல்லாம் ஒரு பருக்கெ கூட வைக்காதெ திண்ணுங்கொ, இல்லாப் போனா ராஜா கிட்டெ சொல்லிடு வேண்ணேன். ஐயோ சாமி! கொஞ்சம் சிரிச்சிட்டு வர்ரேன் பொறு!—[நகைக்கிருன்.] சொன்னது தான் அரிக்கா நாழியிலே அல்லாம் தீர்த்துவுட்டு துங்கோ! ஒரு பருக்கெ கூட இல்லே காலிபண்ணி வச்சிருக்குது—இத்தெ நெனெச்சிக்கினு எனக்கு சும்மா சிரிப்பு வருது! [நகைக்கிருன்.]

வேகமாய் ராஜீவி பின்புறம் வருகிருள.

ராஜீ. ராஜகுமாரா! சீக்கிரம் அந்த இருப்புத தொட்டியை யெடுத்துச்சென்று, அதோ ஜலம் விழுகிற வியாக்கிரத்தின் வாயில் அடைததுவிடும் உடனே கிணறறுாத தண்ணீரெல்லாம் வற்றிப்போம், போம் உடனே!

[வேகமாய் ராஜசிம்ஹன் போக ராஜீவி மறைந்து போகிருள் ]

மறுபடியும் மோகனவல்லி வருகிருள்.

மோ. எங்கே ராஜகுமாரன்? [தத்தன் சமீபம் நிற்கிருள்.]

த. அப்பாடா! அதெல்லாம் முக்கியமா எனக்கு சிரிப்பு வர்லெ!—[நகைக்கிருன்.] இந்த பேதாளங்க அந்த சாப்பாட்டெ திண்ணூட்டு வவுறு உப்பிக்கினு நடக்கமாட்டாதெ உருளுதுங்களே! அத்தெ பாத்தா எனக்குசிரிப்பு அடக்கமுடியலெ! [நகைக்கிருன்.] இந்த மடைய பேதாளங்களுக்கு மஹாராஜா ஒண்ணு! அந்த மஹாராஜாவுக்கு ஒரு பொண்ணு ஒண்ணு! யப்பா!

[சுற்றித் திரும்பும்போது மோகனவல்லியின் மீது விழப்போகிருன்.]

மோ. [ஒதுங்கி] விழாதே என் மீது! தூரநில் துஷ்டா!

த தாங்களா?--ராஜகுமாரன் எங்கே?

மோ. அதைத்தான் உன்னைக் கேட்கிறேன். ஏதோ சூது செய்திருக்கிறீர்கள் நீங்கள் எல்லோரும் சேர்ந்து; நன்ருய்த தெரியும் எனக்கு! எங்கே ராஜகுமாரன? சொல்லுகிருயா, என்ன?

த. என்ன ரொம்ப கோவமாயிருக்கிறதே! இந்தா, நான் சொல்ரத்தெ கேளு, இப்படி யெல்லாம் எங்கிட்ட கோவிசசிக்காதே! அப்றம் மஹாராஜா இடர வேலெயெல்.

லாம் செய்துட்டு வெகுமானம் கேக்கச் சொன்னு, ஒன்னே கட்டிக்கொடுக்கச் சொல்வேன் !

மோ. என்னைப் பரிகாசமா செய்கிருய்? இதோ போய் என் தந்தையை யழைத்து வருகிறேன் நான் ! [போகிருள்.]

த. எ ! நீ அழைச்சிக்கினு வர்ரதென்ன ? நானே வேலெ முடிஞ்சிப் போச்சி, வந்து பாருங்கோ இண்ணு சொல்லி அனுப்பினேனே !

**ராஜசிம்ஹன் மறுபடியும் வருகிருன்.**

ரா. தத்தா, என் வேலையும் முடிந்தது, ஈசன் அருளால் !

த. அதோ ! எல்லாம் வர்ராங்க. ஒரு வேடிக்கெ பார். [படுத்து குறட்டை விடுகிருன்.]

**வீரமார்த்தாண்டனும், கோமதியும், மோகனவல்லியும் வருகிருர்கள்.**

வீ. எங்கே அவன் ? அவன் பெயரென்ன ?

ரா. மஹாராஜா, நமஸ்காரம். இட்ட வேலையை ஈடேற்றி விட்டேன் !

வீ. என்ன ! ஈடேற்றினையோ ? எப்படி ? எதோ பார்ப்போம். [கிணற்றுட் பார்த்து] என்ன ஆசசரியம் ? இதன் சூட்சுமத்தை எங்ஙனம் அறிந்தனை ?—அவன் எங்கே ?—அவன் பெயரென்ன ?

ரா. தத்தா ! எழுந்திரு, எழுந்திரு—

த. ஸ் !—நான் தூங்குரேன், போ !

ரா. மஹாராஜா வந்திருக்கிருர், அழைக்கிருருன்னை.

த. [எழுந்து] ஆ ! மஹாராஜாவா ?

வீ. என்னடா தூக்கம் இப்பொழுது ?

த. வேலெ யில்லாப்போனு வேறே யென்ன செய்யரது ?

வீ. இட்ட வேலையை முடித்து விட்டனையா ?

த. அதும் பேரென்ன ? அவுங்களே கூப்டு கேளுங்க !

வீ. அவைகளைக் கேட்பதாவது ?

த. கேக்க வேண்டியதில்லே, பாத்தா போதும் !

வீ. என்ன வாயாடுகிருய் ?

த. ஆனு கூப்டுங்க.

வீ. **[மாத்திரைக் கோலைச் சுழற்ற, வேதாளங்கள் வராதது கண்டு] என்ன இன்னும் வரவில்லை ?**

த. கொஞ்சம் மொள்ளமா வருவாங்கோ! நடக்றத்துக்கு கொஞ்சம் கஷ்டம்!—அதோ!

வயிறு பெருத்தனவாய் வேதாளங்கள் மெல்ல வருகின்றன.

வி. இதென்ன இது?—அடே? உன்னை நான் சாப்பிடச் சொன்னேனா? இவைகளைச் சாப்பிடச் சொன்னேனா?

த. கொஞ்சம் பொறுததுக்கணும். உங்க உத்தரவெ கொஞ்சம் பாருங்க, நான் சாப்பிடணும்னு எழுதியிருக்குதா? சதரக் களஞ்சியத்லெ யிருக்ற சாப்பாடடெ யெல்லாம் சாப்டாவணும்னு உத்ரவு—சாப்டாச்சி! ஒரு பருக்கெ யிருக்குதா பாருங்கள், அலலாம் கழுவி மொழுவி வச்சிருக்குது!

வி. உம்! எனக்கு நகைப்பு உண்டாகிறது.

த. சரியா சொன்னிங்கோ! எனக்குங் கூட சிரிப்பு வருது இதுங்களெ பாருங்களேன்!

வி. மதியற்ற வேதாளங்களே; இவ்வளவுதானா உங்களுடைய புத்தி?

த. அதுங்களெ கேக்ரத்திலெ பிரயோஜனமில்லெ, ஒண்ணுக்காவது வாயெத் தெறக்க முடியாது. வாவரைக்கும் விருந்து சாப்பாடு.

வி. நடவுங்கள் மூடங்களே! இனியாவது புத்தியுடன் பிழையுங்கள்! இலலாவிடின் உங்கள் எல்லோரையுங் கல்லாய்ச சபித்து விடுவேன்.

[வேதாளங்கள் மெதுவாய்ப் போகின்றன.]

கோ. ராஜகுமாரா, இன்னும் இரண்டு கண்டங்களும் தப்பிய பிறகு நகைக்கலாம்; இதற்குள் நகைத்து விடாதீர்.

வி. ராஜகுமாரா, நீங்க ளிருவரும் செய்யவேண்டிய இரண்டாம் வேலையை நாளைத்தினந் தெரிவிப்பேன். விடை பெற்றுக் கொள்ளுங்கள்.

[ராஜசிம்ஹனும தத்தனும் அரசனை வணங்கிப் போகிறார்கள்

கோமதி, ராஜகுமாரனுக்கு இக்கிணற்றின் சூட்சுமததை யார் தெரிவித்தது?

கோ. எனக்குத் தெரியாதே; ஒருவேளை ராஜீவிதான் சொலலியிருக்கவேண்டும்.

வி. அவளுக்கெப்படித் தெரியும்? நீ தான் சொல்லி யிருக்க வேண்டும்,—சரி, நான் வருகிறேன். [தனக்குள்] எப்படியாவது மற்ற இரண்டு கட்டளைகளையும் இவ்வாறே செய்து முடிப்பாளாக. [போகிறான்.]

கோ. ஏண்டி, ஏமாந்தவளே! நீ தான் அவளுக்குச் சொல்லி யிருக்கவேண்டும். உண்மையைச சொல்.

மோ. ஆமாம், அம்மா. என்னை ஏமாற்றி அறிந்து கொண்டாள்.

கோ. போனது போகட்டும், இனியாவது ஏமாறாதே, ஏமாந்தையோ ராஜகுமாரனைத் தானே கலியாணஞ் செய்து கொண்டு போய் விடுவாள். வா, நாளை வேலைக்குத் தக்க யுக்தி செய்யவேண்டும். [இருவரும் போகிறார்கள்.]

## மூன்றாம் - காட்சி

இடம்—மூடப்பட்டுள்ள இரண்டு குகைகளோடுங் கூடிய
ஒரு மலைக்கோட்டை காலம்—காலை
ராஜசிம்ஹனும், தத்தனும் குகைகளில் அடைக்கப்பட்டிருக்கின்றனர்.
ராஜீவி வருகிறாள்.

ராஜீ. மோசம் போகாள் இனி மோகனவல்லி! ஒரு முறை ஏமாந்தவள் மறுமுறை ஏமாறுவது கடினம். ஆயினும் அவளைக் கொண்டே என் வேலையை முடித்துக் கொள்ள வேண்டும். எங்ஙனமாவது என் காதலன் உயிரைக் காப்பாற்றவேண்டும் கடிதினில்.—எந்தக் குகையில் ராஜ குமாரனை அடைத்திருக்கிறாளோ அப்பாதகி அறிகிலேன். அதை முதலில் தெரிந்து கொள்ளவேண்டும்.
யார் இதனுள்ளே?—பிராணநாதா!—ராஜ குமாரா!—

ரா. [குகையுளிருந்தபடி] ஏன்?

ராஜ இக் குகையினின்றுந் தப்பி வெளிவர ஏதாவது மார்க்க முண்டோ?

ரா. நீ யேதாவது சொன்னால்தா னுண்டு.

ராஜீ. உமது தோழன் எங்கே யிருக்கிறார்?

ரா. அந்த இடதுபுறம் குகையில்.

ராஜீ. [தனக்குள்] எனக்கொரு யுக்தி தோற்றுகிறது; எப்படியும் என் தங்கை யிங்கு வருவாள் என் பிராணநாதனை மறுபடியும் கேட்டுப் பார்க்க,—ஆம், ஆம். அதுதான் வழி,

வேறு கதி யில்லை.—பிராணநாதா !—இந்த ஸ்திதியிலும் 'ஏன்' என்ன மாட்டீரோ ?—உமதிஷ்டம்—ராஜகுமாரா!

ரா. ஏன் ?

ராஜீ. நான் ஒரு யுக்தி சொல்லுகிறேன். அதன்படி நடந்தால் தான இந்த கண்டந் தப்பலாம். செய்கிறீரா அதன்படி ?

ரா. சொல் முன்பு, பிறகு பார்ப்போம்.

ராஜீ. இதிலும் சந்தேகமா ? கேளும் விரைவில், நான் ஒரு யுக்தி செய்திருக்கிறேன் மோகனவல்லி இங்கு வந்து உள் ளிருப்பது யார் என்று கேட்டால், உமது தோழன் பெயரை அவர் குரலோடு சொல்லும், பிறகு நடக்க வேண்டியதை நான் பார்த்துக்கொள்ளுகிறேன்.

ரா. என்னைப் பொய்யா பேசச் சொல்லுகிறாய் ?

ராஜீ. அவ்வளவு செய்யலாகாதா உமதுயிரைக் காக்க ?

ரா. என் உயிர் அவ்வளவு விலை யுயர்ந்ததா ?

ராஜீ. சரி, ஆனால் என்னுயிரைக் காக்கும் பொருட்டாவது அவ் வளவு செய்யலாகாதா ?—என்ன மௌனமா யிருக்கிறீர் ?

ரா. என் பொருட்டு நீ உயிர்விட வேண்டிய தில்லை.

ராஜீ. உம்மோடு வாதாட இப்போது காலமில்லை ; உமது தந்தை யின் பொருட்டாவது அவ்வளவு செய்யமாட்டீரா ?

ரா. ஆமாம், ஆகட்டும் அப்படியே.

ராஜீ. சரி. [மற்றொரு குகையண்டை போய்] ஐயா! ஐயா ! யார் இந்தக் குகைக்குள்ளே ?

த. [உள்ளிருந்தபடி] யாரு இந்த கொகைக்கு வெளியே ?

ராஜீ. நான் தான் ராஜீவி.

த. ஓ ஓ ! ஆனா, நான் தான் அந்த அம்மாளெ கல்லியாணம் பண்ணிக்கப்போரவருடைய தோழன்.

ராஜீ. சந்தோஷம் ஆனால், நீங்கள் இரண்டுபேரும் வெளியேவர ஒரு மார்க்கமுண்டு.

த. என்னா, என்னா !

ராஜீ. மோகனவல்லி இங்கு சீக்கிரம் வருவாள் வந்து இந்த குகைக்குள் யாரென்று கேட்டால், நீர் உம்முடைய தோழன் குரலோடு, நான்தான் ராஜகுமாரனென்று

கூறும். பிறகு தன்னை விவாகம் செய்து கொள்வதானால் இக்குகையினின்று வெளியில விடுவதாகக் கூறுவாள். அப்படியே ஆகட்டுமென்று நீர் கூறினால் ஏமாந்து உம்மை வெளியே விடுவாள். தெரிகிறதா ?

த. நண்ணு, நண்ணு ! ஆவட்டும் ஆவட்டும் !

ராஜ. அதோ வருகிறாள், ஜாக்கிரதை.

மோகனவல்லி வருகிறாள்.

மோ. ஊம், ஊம்,—திரும்பியும் வந்தாயா, மெல்ல ஏதாவது தெரிந்துகொண்டு போகலாமென்று !

ராஜ. இதென்ன, மோகனா, இப்படிப் பேசுகிறாய் ? உன்னை நான் மோசம் செய்வேனா ?

மோ. ஐயோ பாவம் ! ஒன்றுந் தெரியாத பூனை !

ராஜ. அதிருக்கட்டும்—நீ யேது இங்கே வந்தது ?

மோ. ஊம், ஆரம்பித்தாயா ? உனனோடு ஒரு வார்த்தையும் பேசமாட்டேன நான், பிறகு மெல்ல எப்படியாவது என்னை யேமாற்றி ராஜகுமாரனை விடுவித்துக்கொண்டு போய்விடுவாய் நீ, எனக்கு உன்சமாசாரம் தெரியும் !

ராஜ. யாரை? ராஜகுமாரனையா ?

மோ. ஆம், ஆம்.

ராஜ. உனக்கென்ன பயித்தியமா பிடித்திருக்கிறது ? அந்த ராஜகுமாரன் எப்படியானாலும் எனக்கென்ன ?

மோ. பிறகு யார் பொருட்டு இங்கு வந்தாய் ?

ராஜ. அடி மோகனா, நீ யென் தங்கையா யிருந்தபோதிலும் உன்னிடங் கூற எனக்கு வெட்கமா யிருக்கிறபடி.

மோ. என்னிடஞ் சொல்ல வெட்கமென்ன ?

ராஜ. அவருடைய தோழன்—தத்தர் பொருட்டு.

மோ. உண்மையில் ?

ராஜ. உண்மையில்—அடி, மோகனா, எப்படியாவது இவரை மாத்திரம் இக் குகையினின்றும் விடுவித்து விடு. என் நல்ல தங்கையல்ல ! என் கண்ணல்ல !

மோ. இந்தக் குகையிலிருந்தா ? ஓஹோ ! மறுபடியும் என்னை யேமாற்றப் பார்க்கிறாயோ ?—இந்தக் குகையில் யார் இருக்கிறது?—தத்தரா ?

ராஜீ. ஆம்.

மோ. பொய் பேசுகிறாய்!—என் அம்மா சொன்னார்களே வலது புறம் குகையில் ராஜகுமாரன் என்று,

ராஜீ. [குகையின் பக்கம் முதுகுகாட்டி நின்றுகொண்டு] ஆம்' வலது புறம் குகையில் ராஜகுமாரர், இந்தக் குகையில் தத்தர்.

மோ. ஓ, ஓ! ஏதோ திருட்டுத்தனம் பண்ணப் பார்க்கிறாய்!

ராஜீ. ஏனடி! உனக்கேன் என் வார்த்தையில் அவ்வளவு அவ நம்பிக்கை?—நீ கேட்டுப்பார் நேராக.

மோ. பார்ப்போம், ஏதோ—[ராஜசிம்ஹனிருக்கும் குகையண்டை போய்] யார் அங்கே உள்ளே?

ரா. [தத்தன் குரலுடன்] நான் தான் தத்தன்!

மோ. யார்!

ரா தத்தன்!

மோ. என்ன விந்தை! குரலு மப்படியே யிருக்கிறது—ராஜ குமாரன் எங்கே?

ரா. அந்தக் கொகையிலே இருக்கிறாரு.

ராஜீ. இப்பொழுதாவது என் வார்த்தையை நம்புவையா?

ரா. மோகனவல்லி! என்னே கொஞ்சம் வெளியிலே உட மாட்டாயா?

ராஜீ. அடி, மோகனா, என் பொருட்டாவது கொஞ்சம் அவ் வளவு உபகாரஞ் செய்ய லாகாதா?

மோ. ஐ ஐயோ! நான் மாட்டேன். நேற்றைத்தினம் மஹாராஜா இடும் மூன்று கட்டளைகளையும் முடித்துவிட்டு, அதற்கு வரமாக என்னைக் கலியாணம் செய்து கொடுக்கும்படி கேட்கப் போகிறதாகச் சொன்னார், எனக்குப் பயமாயிருக்கிறது.

ராஜீ. அவர் அப்படிக் கேட்பதில்லையென்று சத்தியம்செய்து கொடுத்தால் வெளியில்விடு, இன்னும் உனக்கென்னபயம்?

மோ. ஆனல் கேட்டுப் பார்க்கிறேன்.—ஐயா, இப்பொழுது உம்மை வெளியில் விடுகிறேன் ஒரு நிபந்தனைக் குட்பட்டால், என்னைக் கலியாணம் செய்துகொள்ளப் பிரயத்னப்படுவதில்லை யென்று சத்தியம் செய்யும், வெளியில் விடுகிறேன்.

ரா. அப்படியே ஆவட்டும்.

மோ. சத்தியமா ?

ரா. சத்யமா.

மோ. இதோ குகை திறக்கும். சீக்கிரம் வெளியே போய்விடும்.

[ஓர் சூத்திரத்தின் விசையை மூடுக்க குகை திறக்கிறது]

த. [ராஜசிம்ஹன குரலோடு] ஆ ! மோகனவல்லி ! மோகன வல்லி ! என்னெயும் வெளியே விட மாட்டாயா ?

மோ. யார் அது ?

ராஜீ. அதோ ராஜகுமாரர், அழைக்கிறார் உன்னை.

[மோகனவல்லி அடுத்த குகைக்கு போகும்போது ராஜசிம்ஹன் வெளியேவர, ராஜீவி அவனை அழைத்துக்கொண்டு ஓடிப்போகிறாள்.]

மோ. ராஜகுமாரா ?

த. ஆம் ! ஏன் ?

மோ. ஏன் என்னை அழைத்தீர் ?

த. என்னைக்கொஞ்சம் வெளியிலே உடமாட்டாயா ?

மோ. விட்டால எனக்கென்ன தருகிறீர் ?

த. என்ன வேணும்ணாலும் தருகிறேன்.

மோ. சத்தியமாக ?

த. ரொம்ப சத்யமா.

மோ. ஆனால் என்னைக்கலியாணம் செய்து கொள்கிறீரா?

த. சத்யமா, சத்யமா, சத்யமா !

மோ. ஆனால் வாரும் வெளியே; செய்த சத்தியத்தை மறவாதீர்.

[விசையை மூடுக்க குகை திறந்ததும், தத்தன் வருகிறான்.]

ஆ ! நீயா ?—இதென்ன மோசம் ! எங்கே ராஜகுமாரன் ?

த. [தன் குரலுடன்] மோச மென்ன ? அதோ யிருக்கிறாரு.

மோ. எதோ ?

[குகையின் உட்செலல சூத்திரத்தின் விசையால் தத்தன் குகையை மூடிவிட்டு, ஓயாது நகைக்கிறான்.]

ஐ ஐ யோ ! மோசம் மோசம்!—ஐயா, தத்தரே ! என்னை வெளியே விடும், வெளியே விடும்.

த. வெளியே வுட்டா எனக் கென்ன தர்ரே ?

மோ. என்ன வேண்டுமென்றாலுந் தருகிறேன்.

த. சத்தியமா ?

மோ. ஐயோ ! சத்தியமாக.

த. ஆனா என்னை கண்ணாலம் பண்ணிக்கிறையா ?

மோ. மாட்டேன்.

த. ஆனா நானும் மாட்டேன் !

மோ. ஆஹா ! இப்படியா யென்னை மோசம் செய்தாய் ? கொஞ்சம் பொறு, பிதாவிடம் சொல்லி உன்னை என்ன பாடு படுத்துகிறேனை பார் !

த. அப்பா ! இன்னம் அந்தப் பேச்சா ? ஆனா அங்கேயே கெட — அந்த முட்டும் இந்த வெசெயெ மஹாராணி தெறக்கிறபோது ஜாக்கிறதையா பாத்துக்கினிருந்தோமே !—அடடட ! இதுங்கே எங்கே வருதுங்கோ ?—ஒரு பக்கமா யிருப்போம். [மறைந்து கொள்கிறான்.]

வேதாளங்கள் வருகின்றன.

வே—த. அடே ! மஹாராணி சொன்ன பிரகாரம் ஜாக்கிரதெயா பாத்துக்கனு இருக்கணும் இந்தக் கொகெயெ, இந்த ரெண்டு மனுஷரும் தப்பாமெ யிருக்கும்படி — அடடே ! என்னடா ஒண்ணு தெறந்திருக்கிறதே ?

மற்ற—வே. ஆமாம் ஆமாம் !

வே—த. ஆசாமி ஓடிப்பூட்டானு, உள்ளே யிருக்கிறானு ? மொள்ள போயி பாக்கலாம், வாங்க பின்னாலே

[வேதாளங்கள் குகையுட் போகின்றன. கடைசி வேதாளம் உள்ளே போனவுடன் மறைவிலிருந்த தத்தன் ஓடிவந்து சூத்திர விசையால் குகையை மூடிவிட, உள்ளே அகப்பட்ட வேதாளங்கள் கத்துகின்றன.]

த. ஸ் ! கூச்சல் போடாதிங்க ! மஹாராஜா வர்ரார் ! கப்சப் !

[மறுபடியும் போய் மறைந்துகொள்கிறான்.]

விரமார்த்தாண்டனும், கோமதியும், ராஜீவியும், வருகிறார்கள்.

கோ. குகைகளிரண்டும் மூடித்தா னிருக்கின்றன. ஆகவே ராஜீவிதான் அவனை யெங்கேயோ அழைத்துக்கொண்டு போய் ஒளித்து வைத்திருக்கவேண்டும்.

வி. ராஜீவி, எங்கே உன் தங்கை ?

ராஜீ. அண்ணா, எனக்கொன்றுந் தெரியாதே.

மறுபடியும் தத்தன் வருகிறான்.

த. மஹாராஜா, முதலில் நமஸ்காரம்! பிறகு கொஞ்சம் பலகாரம்; ரொம்ப பசியா யிருக்குது.

வீ. ஆ! என்ன ஆச்சரியம்! குகை மூடியிருக்குது! எப்படி வெளியில் வந்தானிவன்?

த. ரொம்ப சுளுவு! கொகைக்கி மேலே வெளிச்சம் வர ஒரு துவாரம் இருந்துது. சரி யிண்ணு குடிமியே ஒரு கை யிலே பிடிச்சிக்கினு இப்படி, இன்னொரு கையாலே இப் படி புட்டத்திலே ஒரு தட்டு தட்னேன், மேலே பறந்து வந்துட்டே! வேடிக்கெயா யில்லெ யிது?

கோ. வேடிக்கையைப் பார்ப்போம்! இந்த க்ஷணம் உன் கண் முன்பாக உன் தோழனை ராஜகுமாரனைச் சபித்துவிடச் சொல்லுகிறேன்,—பிராணநாதா, சூரியாஸ்தன மாயிற்று. இனி குகையைத் திறந்து உள்ளே யிருப்பவனைச் சிட்சிக்க வேண்டியது தான்.

த. செய்யுங்க! வாணுமிண்ரேனு?

[கோமதி சென்று விசையை முடுக்க குகை திறக்கிறது.]
மோகனவல்லி உள்ளிருந்து மெல்ல வருகிருள்.

கோ. ஏனடி! இங்கா இருந்தாய் நீ?

த. சிட்சியுங்கம்மா! சிட்சியுங்க. சொன்னபடி செய்யுங்க, அது மாத்தரம் தவறக்கூடாது.

வீ. எங்கே ராஜகுமாரன்?

த. இந்த அம்மாளெ கேளுங்களேன்.

மோ. [ராஜீவியைக் காட்டி] எல்லாம் இவள் செய்த சூது அம்மா!

கோ. அப்படி ஒன்றும் சூது நேரிடாவண்ணம் நமது வேதாளங் களைப் பார்த்துக்கொள்ளும்படி அனுப்பினேனே, எங் கே அவைகளெல்லாம்?

வே. எல்லாம். [குகையிலிருந்தபடியே] இங்கே யிருக்கிறோம்! இங்கே யிருக்கிறோம்!

வீ. எங்கே?

வே. எல்லாம் கொகெக்குள்ளோ!

வீ. என்ன விந்தை!—வாருங்கள் கழுதைகளே வெளியே!

[விசையால் குகையைத் திறக்க வேதாளங்கள் ஒவ்வொன்றாய் வெளியே வருகின்றன.]

மறுபடியும் ராஜஸிம்ஹன் வருகிறான்.

ரா. [வணங்கி] மஹாராராஜா, எனக்கிட்ட இரண்டாந் தொழிலையும் நிறைவேற்றினேன். மூன்றாவதென்னவோ தயை செய்து கூற வேண்டும்.

வி. இந்த அவமானத்தை சகியேன். [போகிறான்.]

த. சரி, மஹாராராஜவுக்கு மூணாவது வேலெயிட யிஷ்டமில்லே! அவருக்குப் பதிலா நான் இடரேன்.—ராஜகுமாரா, மூணாவது கட்டளே, நீ யிந்த ராஜகுமாரியெ கண்ணாலம் பண்ணிக்க வேண்டியது.

கோ. உம், உம்! பார்ப்போம் நாளை அதை!—எல்லாம் இந்த முழுமுண்டத்தால்தான் வருகிறது.

த. அதென்னமோ வாஸ்தவம், மஹாராராணி.

கோ. வாடி நீ— நாளைத்தினம் அதிகாலையில் நந்தவனத்தில் வந்து சேருங்கள். உங்கள் மூன்றாவது கட்டளை கொடுக்கப்படும். செல்லுங்கள் நீங்கள்.

[ராஜஸிம்ஹனும், தத்தனும வணங்கிப் போகிறார்கள். பிறகு ராஜீவியைப் பார்த்து]

ஒன்று மறியாத பூனை! நீ யென்ன செய்கிற யிங்கே? வா இப்படி என்னுடன்—வாடி நீயும்.

[எலலோரும் போகிறார்கள்.]

## நான்காம் காட்சி

இடம்—தோட்டம். காலம்—காலை.

ராஜஸிம்ஹன் வருகிறான்.

ரா. ஹா! இன்னொரு முறை படித்துப் பார்க்கிறேன். [வாசிக்கிறான்.] “இன்று பகல் பதினைந்து நாழிகைக்குள் என் இஷ்டதேவதையின சன்னதியில் மனப்பூர்த்தியா யிணங்கும் மானிட னொருவனைப் பலியாகக் கொடுக்கவேண்டும்” எனக்கு முன் வந்த அரசர்களெல்லாம் சபிக்கப்பட்ட காரணம் நன்றாய்த்தெரிகிறது இப்பொழுது. மனப்பூர்வமாய் பலி கொடுக்கபட இசையும் மானிடன் ஒருவன்

உளரோ இவ்வுலகில்? மற்றவர்கள் கதியை நானும் அடைய வேண்டியதுதான்!—பொறு—சீச்சீ! என்ன மதியற்றவனு யிருக்கிறேன்! என்னையே பலியாகக் கொடுக்கிறேன் மனத்தில் சந்தோஷத்துடன்! இதனிலும் வேறு பேறு கிடைக்குமோ எனக்கு இந்த மானிட ஜன்மத்தில்? சீ! இநத யோசனை ஏன் இதுவரையில் தோன்ருதிருந்தது எனக்கு? அதுவே எனக்குப் பெரிய இழிவாகும்!—உடனே மஹாராஜாவிடம்போய்த் தெரிவிக்கிறேன்.—ஈசன் இருக்கிருர். [போகப் புறப்படுகிருன்.]

மறைந்திருந்த ராஜீவி வருகிருள்.

ராஜீ. பிராணநாதா!—ராஜகுமாரா! எங்கே விரைந்து போகிறீர்?

ரா. மஹாராஜாவிடம், நான் சீக்கிரம் போகவேண்டும்; தயை செய்து தடை செய்யாதே.

ராஜீ. ராஜகுமாரா, என்னை மன்னிக்கவேண்டும் ஒரு க்ஷணம். இதுவரை துக்கப்பட்டுக் கொண்டிருந்தவர் திடீரென்று முகம் மலர்ந்து முறுவலுடன் விரைந்து செல்லவேண்டிய காரணமென்ன? மஹாராஜாவின் கட்டளையை நிறைவேற்றிப் பிழைக்கும் மார்க்கம் ஏதாவது கண்டீரோ?

ரா. உம்—மஹாராஜாவின் கட்டளையை நிறைவேற்றிச் சாகும் மார்க்கத்தைக் கண்டேன்.

ராஜீ. என்ன! சாகும் மார்க்கத்தையா?

ரா. ஆம்.

ராஜீ. நிறைவேற்றின் நீர் மரிப்பானேன்?

ரா. நிறைவேற்றுவதில் நான் மரிக்க வேண்டும்

ராஜீ. ஐயோ! எப்படி?

ரா. மூன்ருவது கட்டளை தெரியுமோ?

ராஜீ. முற்றும் தெரியும்!—ஆயினும்—

ரா. என்னையே பலியாகக் கொடுக்க இசைந்தேன்.

ராஜீ. ஹா! பிராணநாதா! நினைத்தேன் நினைத்தேன்!

ரா. ராஜகுமாரி, உன துக்கத்தை சற்று அடக்கிக்கொள்.

ராஜீ. பிராணநாதா! இதினின்றுந் தப்பிப் பிழைப்பதற்கு ஒரு மார்க்கமு மில்லையா?

ரா. எனக்குத் தோன்றவில்லை; உனக்குத் தெரிந்தாற் சொல்.

ராஜீ. ஐயோ! எனக்கொன்றுந் தோற்றவில்லையே! இரவெல்லாம் நித்திரையை நீத்து நினைத்து நினைத்துப்பார்த்தேன். தப்பும் வழி யொன்றுந் தோற்றவில்லையே. நான் என் செய்வேன்? என செய்வேன்?

ரா. எனக்குப் போக விடை யளிப்பாய்.

ராஜீ பிராணநாதா! தாயாருக் களித்த வாக்கைக் காப்பதன் பொருட்டு தனையன் உயிர் விடுதல் முறையோ?

ரா. ராஜகுமாரி, என்ன அறியாதவள் போற் பேசுகிறாய்? பதினாயிரம் உயிரிருந்து அவை யனைத்தையும் பலி கொடுத்தே னாயினும் பத்துமாதம் சுமந்து பெற்ற என் அன்னையின் ஒரு நாள் கஷ்டத்திற்கு ஈடாகாதே!

ராஜீ. ஐயோ! பிராணநாதா! நெடுங்காலத்திற்கு முன் சபிக்கப் பட்ட உமது தந்தையை உயிர்ப்பிப்பதற்காக, இவ் வயதில் நீர் உமது உயிரை நீப்பது நியாயமோ?

ரா. ராஜகுமாரி, நான் பிறந்த காலை "என் மைந்தன்" என எண்ணி உள மகிழ்ந்தாரே, அவ்வொரு எண்ணத்திற்குக் கைம்மாறாகாதே எனதுயிரை அவர் பொருட்டுக்கொடுத்தல்.

ராஜீ. பிராணநாதா, இவ்வாறு பேசும் உமக்கு பேதையாகிய நான் சொல்லக் கூடியதென்ன இருக்கிறது?

ரா. ஒன்றுமில்லை—எனக்குப் போக வழி விடு.

ராஜீ. பிராணநாதா, இப்பொழுதாவது 'காதலி' என என்னை யழைத்து எனனிதயங் களித்திட ஒருவார்த்தை கூறி விட்டுப்போமே.

ரா. என்ன பிரயோஜனம் அதனால் உனக்கு?

ராஜீ. இந்த ஜன்மத்திலில்லாவிட்டாலும், மறுஜன்மத்திலாவது உம்மைக் கணவனாகப் பெறுகிறேன் நான் எவ்விதமாவது.

ரா. ராஜகுமாரி, உன்னைக் கண்ணுற் கண்டவர்கள் யார்தான் காதல் கொள்ளார்கள் உன்மீது?

ராஜீ மற்றவர்க ளிருக்கட்டும், நீர் காதல் கொணடிருக்கிறீரா உண்மையில் என்மீது?

ரா. ஆம்—நேரமாகிறது வழிவிடு.

ராஜீ. அவ்வளவு போதும். பிராணநாதா, என் ஜன்ம மினி சபல மாயது—பிராணநாதா, இன்னும் ஓரே சந்தேகம்,

தாம் இப்பாழும் தேசத்திற்கு வந்ததற்கு, தந்தையை மீட்ப தன்றி வேறொருகாரணமு முண்டென்றீரே, அது என்ன? இப்பொழுதாவது சொல்ல லாகாதா?

ரா. அதை நீ அறிந்து பய னில்லை, ஒருகால் அது உனக்கு வருத்தமா யிருக்கினும் இருக்கலாம்.

ராஜீ. எப்படி யிருந்தபோதிலும் எனக்குத் தயை கூரவேண்டும்.

ரா. சரி, உன்னிஷ்டம். இத்தனை அரசர்களுக்கும் இக்கதி விளைத்ததற்கு ஆதிகாரணமாகிய உன்னை, என் தாயார் தக்கபடி தண்டிக்க அவர்களிடங் கொண்டுபோய் விட வேண்டு மென்பதே.

ராஜீ. நீர் தப்பிப் பிழைத்தால அப்படியே செய்வீரா?

ரா. செய்வேன்

ராஜீ இதுதானோ உமது காதல்?

ரா. இதுதான் உண்மையான காதல்.

ராஜீ. நான் அதற்கு உடன்படாவிட்டால்?

ரா. என்மீது உண்மையான காதல் நீ கொண்டிருப்பதானால் உடன்படுவாய்.

ராஜீ. ஒரு வேளை உமது தாயார் என்னைக் கோபத்தாற் கொன்றால்?

ரா. நானும் உன் பொருட்டு உயிர் விடுவேன்.

ராஜீ. பிராணநாதா! உமது உத்தம குணத்தையும் உண்மையான காதலின் திறத்தையும் இப்போதே கண்டேன்.—பிராண நாதா, நீர் தப்பும் விதம் அறிந்தேன் நான். நீர் சாக வேண்டியதில்லை இனி.

ரா. என்ன அது?

ராஜீ. என்னைப் பலியாககொடும். தந்தையின் பொருட்டுத் தன்னுயிரைக் கொடுக்கச் சித்தமாகிய என் காதலன் பொருட்டு எனதுயிரைக் கொடுக்க நான் சித்தமாயிருக்கிறேன்.

ரா. காதலியே! மெச்சினேன் உன் காதலின் திறத்தை! ஆயினும் அது உதவாது. என் கடனை நானே தீர்க்கவேண்டும், நேரமாகிறது வழிவிடு.

தத்தன் வருகிறான்.

த. கொஞ்சம் பொறுக்கணும், மொதல்லெ, என்னெ மன்னிக்கணும், கொஞ்ச நாழிக்கி மின்னே இங்கே வந்து

நீங்க பேசின சமாசாரமெல்லாம் கேட்டுக்குனிருந்தேன். ரெண்டாவது நான் சொல்ரத்தெ கொஞ்சம் கேக்கணும். இப்பொ என்னமோ இந்த பேதாள மஹாராஜா என்னெ சபிச்சுடப் போராரு இண்ணைக்கு.

ரா. ஏன் ?

த. இட்ட மூணாவது கட்டளெயெ நெரெவேத்தலே இண்ணு.

ரா. என்ன கட்டளை யிட்டார் உனக்கு ?

த இண்ணைக்கி முழுதலும் உங்க மூஞ்செ நானுபாக்கா' திருக்கணும் இண்ணு; இப்ப என்னமோ நான் பாத் தூட்டேன் உங்க மூஞ்செ.

ரா. ஐயோ ! இப்பொழு தேன் இங்கு வந்தாய் நீ ?

த. அதெல்லாம் தெரிஞ்சிதான் வந்தேன் அப்பவே நெநெச் சேன், இதுலெ என்னமோ சூதிருக்குதிண்ணு. எங்கே ஒரு வேளெ என்னெ பொலி குடுக்கப் போரைங்களோ இண்ணு, இந்த யுக்தி பண்ணுரு இந்த மஹாராஜா ! இனிமேலே யோசிக்கிரத்லே பிரயோஜன மிலலே. எப் படியும் நானு சாவணும், என்னெ பொலி குடுததுடுங்க. நான் சந்தோஷமா சாவரேன்.

ராஜ். பிராணநாதா, பிராணநாதா ! நானிருக்கிறேனே !

த. அதெல்லாம் ஒதவாவது நீ இப்போ வந்தவ, நானு பொறந்த நாளுமொதலு கூட இருக்கிறவன், எனக்குத் தான் அந்த சுதந்தரம்.

ராஜ். எனக்குக் கொடுக்க மாட்டீரா அந்தச் சுதந்தரம் ?

த. அதெப்படி குடுக்கலாம் ? அதெல்லாம் ஒதவவே ஒத வாது, நான் போயி சொல்லிவிடரேன் அந்த மஹாராஜா கிட்ட. [போக முயல, ராஜசிம்ஹன் தடுக்கிறான்.]

ராஜ். நான் முன்பு போய் கேட்டுக்கொள்ளுகிறேன்.

[வீரமார்த்தாண்டன் தோன்றுகிறான்.]

தந்தையே, எனக்கொருவரம் அருளவேண்டும். என் பிராணநாதன் — இந்த—ராஜகுமாரன் என்னைப் பலி கொடுக்கும்படி கட்டளையிடும்.

த. அது ஒதவாது. என்னெ தான் பொலி குடுக்கணும். அவருக்காவ பள்ளிகூடத்லேகூட எவ்வளவு ஒதெ பட் டேன் நானு !

வி. ராஜகுமாரா, என்ன சொல்லுகிறாய் நீ?

ரா. என்னைக் கேட்கவும் வேண்டுமா? என்னைத்தான் பலியாகக் கொடுக்கப் போகிறேன். அழைத்துச் செல்லும் உமது இஷ்டதேவதையின் சன்னிதானத்திற் கென்னை.

ராஜீ. பிராணநாதா! [ராஜசிம்ஹனைக் கட்டிக்கொள்ளுகிறாள்.]

த. என்னெ மீறிக்கினு எப்டி போரையோ பாக்கலாம்!

[ராஜசிம்ஹனைச் சேர்த்துக் கட்டிக்கொள்ளுகிறான்.]

வி. ராஜகுமாரா, இங்கு நடந்த விஷயங்களை யெல்லாம் நான் அசரீரியாயிருந்து கேட்டிருந்தேன். மிகவும் சந்தோஷம். நீ யிந்த மூன்றாவது கட்டளையை நிறைவேற்ற வேண்டிய தில்லை; என் குமாரத்தியாகிய இவளை உனக்குக் கொடுக் கிறேன். உங்கள் மூவரையும் உமது தேசத்திற்குக் கொண்டுபோய்ச சேர்க்கிறேன். என்ன சொல்லுகிறாய்?

ரா. என தந்தை?

வி. அவரைப்பற்றி மாத்திரம் என்னை கேட்காதே, உன்னைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

ரா. ஆனால் இதைப் பற்றி நீர் எனனை கேட்காதீர், உம்மை வேண்டிக் கொள்ளுகிறேன். இனி கால தாமதம் செய்யா தீர். எங்கே உமது இஷ்ட தேவதையின் கோயில்?

வி. வேண்டாம், வேண்டாம். நான் சொல்வதைக் கேள்.

ரா. கேளே னினி. இந்த க்ஷணம் அங்கு கொண்டு போய் விடும் என்னை. இல்லாவிடின் இட்ட கட்டளையை ஈடேற் றிய போதிலும் வாக்களித்த வரததின்படி ஈடேற்ற வகை யற்ற மன்னன் என்று ஒப்புக்கொள்ளும்!

வி. ஆனால் இப்பழி உன் தலையில்!

ரா. என்னைப் படைத்த ஈசன் தலையில்!

வி. ஆனால் அதோ பார், அக்கோயில!

[யாத்திரைக் கோலைச் சுற்றிப் பின்புறங்காட்ட அப்போதக்கிருந்த காக்ஷி மாறி கோயில் ஒரு புறம தெரிகிறது.]

த. ராஜகுமார, சாமி இருக்குறுரு சாமி இருக்குறுரு, இண்ணிக்கி னிருந்தியே, இருநத சாமியெ பாரத்தையா? இந்தக் கெதிக்கிக கொண்டாந்துட்டுது! அத்தெ யெல் லாம் நம்பாதே, நான் சொல்ரத்தே கேளு. சாமியு மில்லே கீமியுமில்லே, நான இருக்குறேன், என்னெ பொலி குடுத்துடு,—என்னு சொலம்ர!

ரா. முன்பு சொன்னதைத் தான்.

த. இன்னம் சாமி யிருக்குறுரோ உனக்கு?

ரா. என்றும் சாமி யிருக்குறுர், எல்லோருக்கும் !—மஹாராஜா, ஒரு கடைசி விண்ணப்பம். எப்படியும் நான் சாகப்போகிறேன். நான் சாகுமுன் என் தந்தையின் உருவை ஒருமுறை பார்த்து விட்டு இறக்கவேண்டு மென்னும இச்சை யொன்று என் மனத்தில் குடிகொண்டிருக்கிறது; சிலையாகவாவது அவரை ஒரு முறை என் கண்ணாரப் பார்க்க அருள லாகாதா?

வி. அப்படியே ஆகட்டும். அங்கிருந்தே பார், அருகிற் செல்லாதே.

[மாத்திரைக் கோலை சுழற்ற, மற்றெரு புறத்துக்காக்ஷி மறைந்து ராஜசிம்ஹன் தந்தை சிம்ஹவர்மனுடைய உருவம்தெரிகிறது]

ரா. [வணங்கி] எந்தையே! எந்தையே!! எந்தையே!!!—சரி இனி ஒரு க்ஷணமும் தாமதியேன்! மஹாராஜா, உமது கட்டளையை நிறைவேற்றுகிறேன்; நீர் உமது வார்த்தைப்படி என் தந்தையை உயிர்ப்பிக்கவேண்டும்.—தத்தா, ஒன்றும் பேசாதே, உயிர் பெற்ற என் தந்தையை என் தாயாரிடம் நீதான் அழைத்துச் செல்லவேண்டும்.—ராஜீவி, என மீது நீ காதல் கொண்டது உண்மையானுல் என் தாயாரிடம் போய்ச சேர், அவர்கள் என்ன சிக்ஷை விதிக்கிருர்களோ பெற்றுக்கொள்.

த. ரொம்ப நாயம்!—சாமி யிருக்குறுரு—கோவுல்லே!

ரா. இருக்கிறுர் எங்கும் ஈசன்! [வாளை உருவுகிறுன்.]

கோமதியும மோகனவல்லியும வருகிறு-கள்.

கோ. ராஜகுமாரா! ராஜகுமாரா! பொறும்! பொறும்! அரை க்ஷணம்! ஒரு வார்த்தை கேளும், உம்முடைய தந்தையை உயிர்ப்பிக்கிறேன் என் குமாரத்தியை மணம் புரிவதாக வாக்களியும், இந்த க்ஷணம்.

ரா. [அவர்களைத் திரஸ்கரித்து ஒரு புறம் ஒதுக்கி] ராஜீவி, மறவாதே!--தத்தா, மறவாதே!—மஹாராஜா மறவாதீர்!
[சிரசைச் சேதிக்க உடைவாளை ஓங்கி]
எந்தையே!—ஈசனே!—

[சிலையுருவம் உயிர்பெற்று விரைந்து வந்து ஓங்கிய கையை உடனே பிடித்துக்கொள்கிறது. கோமதியும்மோஹனவல்லியும் மறைகிறார்கள்]

[கண்ணை மூடிய வண்ணம்] யார் என்னைத் தடுப்பது ?

சி. கண்ணே ! கண் விழித்துப் பார்.

[ராஜசிம்ஹன் கண் விழித்து தந்தையின் பாதங்களில் வணங்க ,உடனே சிம்ஹவர்மன் அவனை தழுவிக்கொண்டு.]

குழந்தாய்! உன் கடனை தீர்த்துவிட்டனை—நான உனக்கு உயிரைக் கொடுத்தற்கு எனக்கு நீ உயிரை யளித்தாய் !

வி. உமக்கு மாத்திரம் அன்று, எனக்கும் உயிரை யளிததான் உமது குமாரன். இத்தனைக் காலமாக என்னைப் பற்றி யிருந்த சாபமானது இன்று தான் நீங்கி பழயபடி நான் என் நாட்டின் அரச னானேன். ஒரு அப்சர கன்னிகை யின் பொருட்டு ஒரு மஹரிஷியை நான் ஒரு போது பழிக்க, அவரது சாபத்தால் நான் இவ்வேதாள மன்ன னாகி, என் மந்திரி முதலானோரும் வேதாளங்க ளாய்விட் டார்கள். தன் தந்தையின் பொருட்டு எந்த அரசகுமார னாவது தன உயிரைக் கொடுக்க இசைவானாயின் இந்தச சாபம் நீங்குமென அவர் அருளினார்; அதன பொருட்டு இங்கு வரும் அரசர்களை யெலலாம் சிலையாக்கி வந்தேன், எந்த அரசகுமாரனாவது தன் தந்தையின் பொருட்டு தன்னுயிரைக் கொடுக்க இசைந்து எம்மை இச்சாபத் தினின்றும் ஈடேற்றுவானென எண்ணி; இத்தனைக் காலம் பிடிததது அசசாபம் நீங்க.—அப்பா ! உன்னால், நான் என் பழய ஜன்மத்தைப் பெற்றேன் ! உனக்கு வேணடிய வரததைக் கேள, தருகிறேன்.

ரா. என தாயாரைப் பாாக்கவேணும் இக்ஷணம் நான்.

ஆ அப்படியே ஆகட்டும். [மாததிரைக்கோலைச சுழற்ற] குமுதசுந்தரி திடிரொன்று தோன்றுகிறள.

கு. ஆ ! எங்கு இருக்கிறேன் நான் ?—பிராணநாதா !பிராண நாதா ! உம்மை உயிருடன் காணப் பெற்றேனே !—இது கனவல்லவே !

ரா. அமமா, அவ்வளவும் நனவுதான்.

கு. [ராஜசிம்ஹனைக் கட்டியணைத்து]கண்ணே ! கண்ணே! நீயே புத்திரன் ! நீயே புதல்வன் ! உன் வார்ததையை நிறைவேற் றினையே ! உனக்கு ஈசன்தான் கைம்மாறு செய்யவேண்டும்!

ரா. அம்மணி, இன்னும் முற்றிலும் நிறைவேற்ற வில்லையே; அந்தக் குறையையும் பூர்த்தி செய்கிறேன். அம்மணி, இதோ அந்த அரசகுமாரி, [ராஜீவியைப் பிடித்து] உம்மிடம் ஒப்புவிக்கிறேன். உமதிஷ்டப்படி தண்டியும்.

கு. பிராணநாதா,– [கணவன் காதில் ஏதோ சொல்லுகிறாள்.]

சி. அப்படியே செய், எனக்கும் முழுச் சம்மதம்.

கு. அப்படியே,—இதோ சிக்ஷை விதிக்கிறேன்—ராஜகுமாரி, நீ தனியா யிருந்த தனாற்றான் இவ்வளவு கஷ்டமும் நேர்ந்தது இனி அப்படி ஏதும் நேராவண்ணம் உனக்குத் தளை பூட்டி வைக்கவேண்டும் இதோ தளை !

[ராஜீவியின் கரத்தை ராஜசிம்ஹன் கையிற சேர்த்து]

இனி இத்தளையினின்றும் என்றும நீ நீங்கலாகாது.

ராஜீ. இல்லை மாமி.

த. அடடா சாமி ஒருத்தார் இருக்குறாரையா எங்கேயோ ! ஒப்புக்க வேண்டியது தான்.

ரா. தத்தா, இப்பொழுதாவது தெரிந்ததே உனக்கு, சந்தோஷம்.

த. ஆமாம்; அந்தசாமி ஒங்களுக்கு மாத்திரந் தானே இருக்கிறாரு. எனக்கில்லையோ ?

ரா. எல்லோருக்குந் தானிருக்கிறார்.

த. ஆனா, எங்கே மோகனவல்லி ?

வீ. அப்பா, அவளைத தேடுவதிற பயனில்லை, அவளும் அவள் தாயும் நான்செய்த பாபமேபெண்ணுருவெடுத்து என்னை இது காறும் பீடித்துவந்த ஜன்மங்கள். என் சாப விமோசன காலமாகவே அவர்கள் அந்தர்த்தான மாயினர்.

த. நம்ப பேதாளங்க என்ன மானுங்க ?

வீ. அவர்களெல்லாம் சாபம் நீங்கி எனது மந்திரி முதலிய பிரஜைகளாயினர்.—நண்பனே, என் தேசத்திலேயே இவர்களிருவருக்கும் விவாகம் நடத்த விடையளிக்க வேண்டும்.

சி. உமதிஷ்டம்.

த. என்னிஷ்டம் !

ரா. ஈசன் இஷ்டம்.

**காட்சி முடிகிறது**

**நாடகம் முற்றியது**